## மண்டலம் 1. சூக்தம் 21.

2. இந்திராக்கி யிருவரை யேத்துமின்;
நந்தா கூறிய வெக்கியத் தன்னவர்
நந்த வாழ்த்தி நாக டுதியுமின்;
சந்த காயத்திரி யிசை சாற்றுமின்.

(இ-ள்.) மனிதர்களே! இந்திராக்கினியிருவர்களையும் புகழுங்கள்; யக்ஞத்தில் நானுவிதசஸ்திரங்களால் அழகுபடுத்துங்கள்க; காயித்திரிமந்திரங்களாற் பாடுங்கள்—(எ-று.) சஸ்திரமெனினும் உக்தமெனினும் ஒக்கும்.

3. சோமபாணிக ளிந்திரவங்கிக
ளோம மித்திர னிம்மக காரகன்
சேமமான புகழிற் சிறக்கவென்
றோம சோமத் துவக்க வழைப்பமே.

(இ-ள்.) சோமபானிகளாகிய இந்திராக்கினிகள், இவ்வெக்கியமாற்றும் யஜமானனுடைய நண்பனது கீர்த்திபெருகுமாறு, சோமம்பருகவரும்படியழைப்போம்—(எ-று.) இவ்விடத்து, மித்திரன் என்பதற்குஉலககாவலனுகிய மித்திரனென்னுங் கடவுளெனப் பொருள்கொண்டு முட்டுப்படுவர் மேனுட்டாசிரியர். இது, சாயணருரையினிடத்து அவருக்குள்ள நம்பிக்கைக்குறைவா லேற்பட்டது.

4. உக்கிரத்துப் பகையை யொறுப்பவர்
தக்க விச்சுவனந் தருகள்ளிவ்வி
யொக்க வுண்ண வழைப்ப, மிந்த்ராக்கினி
யிக்கணத் திவணைகி யருள்கவே.

(இ-ள்.) சத்துருவதை முதலியவற்றில் உக்கிரமுள்ளவராகிய இந்திராக்கினிகளை சோமமுண்ணவழைக்கிறோம். (இந்தப்பிராதக்கால) ஸவனத்தில் தரும் சோமச்சுறையின் அருகேயமாட்டும். இந்திராக்கினிகளே! இங்குவாருங்கள்—(எ-று.)

5. அவைக்கு நாயகராய்க் குணமேம்படு
சுவர்க்க நாயக வங்கி யரக்கரை
யவிப்பதோடுயிர் தின்னு மவர்களைத்
தவிக்க வாட்டுக சந்ததி யின்றியே.

(இ-ள்.) ஸபாபாலகரும், குணஞ்சிறந்த மகான்களுமாகிய இந்திராக்கினிகளே! இராட்சஸரை வலிகெடுப்பதோடு, உயிர்களைத்தின்னும் அவர்களுக்குச் சந்ததியில்லாமலுஞ் செய்க—(எ-று.)

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

6. இந்திராக்கினி யிந்தவு முண்மைகொண்
டந்தில் கன்ம வடைவை யுணர்த்துமச்
சுந்தரப்பதந் தோய்ந்து நிதானமாய்
நந்து மின்ப நமக்கென் றளிக்கவே.

(இ-ள்.) இந்திராக்கினிகளே! (செய்கையின் பலனைத்தவருதளி-கும்) உமது இந்த உண்மையினால், சற்கருமபலனிதுவென நினைப்பூட்டுஞ் சுவர்க்கத்திற்போய் ஸாவதானமாகவிருந்து, எங்களுக்குச் சுகத்தைத்தருவீர்களாக—(எ-று.) சுந்தரப்பதம்: சுவர்க்கம்; நமக்கு எமக்கென்பொருளில் வந்தது.

வருக்கம் 3.

## 22. மண்டலம் 1. அநுவாகம் 5. சூக்தம் 5.

21 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மேதாதிதி; வடமொழிச்சந்தம்: காயத்திரி; தேவதை:, 1-4 அசுவினிதேவர்கள்; 5-8 ஸவிதா; 9-10 அக்கினி; 11 தேவிமார்; 12 இந்திராணி வாருணி, ஆக்கினேயி; 13, 14-தியாவாபிருதுவிகள்' 15-பிருதுவி; 16-21 விஷ்ணு.

1. காலையிற் செய் சவனங் கலந்துறுங்
கோல வச்வினி தேவரைக் கூருணர்
வாலுமா றிங் கெழுப்புக; வன்னவ
ரேலு மிச்சுதை மாந்த விவணுறல்.

(இ-ள்.) பிராதஸ்ஸவன கிரஹத்திற் கூடும் அசுவினிகளை நல்லுணர்வுண்டாகும் வண்ணம் (தூக்கம் நன்குய்த்தெளியும் வண்ணம்) (ஹோதாத்வர்யுக்களே!) எழுப்புங்கள். அவர்களிருவரும் இந்தயாகதலத்தில் பிழியுஞ் சோமத்தையுண்ணவரட்டும்—(எ-று.)

2. வான் றொடுபவர் சூதரி லுத்தமர்
வான் றிகிரி வகிக்கு முடயராங்
கோன்பெறு மச்சுவினிப் புலவர்க
ளென்று சார்ந்திட வெண்ணி யழைப்பமே.

(இ-ள்.) விண்ணுலகைத் தொடுபவரும் (விண்ணுலகில்வசிப்பவர்களும்,) தேர்கடாவுவோரிலுத்தமரும், நல்லதேரோடு கூடியவருமான உபய அசுவினிதேவரையும் யாங்களழைப்போம்—(எ-று.)

## மண்டலம் 1. சூக்தம் 22.

3. தோன்றுசி ரச்சுவினிப் புலவர்காள்!
ஆன்ற வன்பொடு மெய்யுரை யாடுவீர்!
தேன்றுளிக்குங் கசையிஞெ டேகியிங்
கேன்ற வன்னதின் யாகந் தெளிக்கவே.

(இ-ள்) அசுவினி தேவர்களே! பிரியஸத்தியவாக்கோடு கூடிய நீர் தேன்றுளிக்கின்ற உமதுகசையினுல் எக்கியதலத்தில் (ஸோமந்) தெளித்தருளுவீர்களாக—(எ-று.)

4. சோம யாசியின் றில்லகந் தூரமே
யாமென் றெண்ணிட ரண்மையின் வாய்ந்ததே
சேமம் வாய்ந்த வுந்தேரினி லச்வினி
நாமம் வாய்ந்துள தேவர்க ணண்ணவே.

(இ-ள்.) சோமமளிக்கும் யஜமானனது கிரகம் தூரத்திலில்லை, சமீபத்திலேயேயுளது. அசுவினிகளே! உங்கள் தேரிலேறி வருவீர்களாக—(எ-று.)

5. பொற்கரத் தொளிர் தேவன் சவிதாவை
யெற்குதவி யிழைக்கென வேண்டினேன்;
நற்கடவுள னுடி னவன்மறை
முற்றரும் பதமுன்னி யுணர்வனே.

(இ-ள்.) பொற்கையோடு கூடிய தேவஞன ஸவிதா வெனக்குத் துணைசெய்யுமாறு அவனைவேண்டினேன். அந்த ஸவிதாதேவன் இம்மறையினுற் பிரதிபாதிக்கப்படும் பதத்தை (ஸ்தானத்தை) யறிவான்—(எ-று.) கௌஷீதகிப் பிராஹ்மணத்தில் பொற்கை ஸவிதாவுக்கு வந்தவகை சொல்லப்படுகிறது. தேவர்கள்செய்தயாகத்தில் ஸவிதாதானே பிராஹ்மணனுகவிருந்து நடத்தியபோது சில அத்வர்யுக்கள் 'பிராசித்ரம்' (தின்னக்கூடியது என்பது பொருள்) என்னும் பெயரையுடைய புரோடசத்தை அவன் கையிலிட்டதாகவும், உடனே அதை வாங்கிக்கொண்டு அக்கையை வெட்டிவிட்டதாகவும், அவ்வத்வர்யுக்கள் பொன்னினுல் ஒரு கைசெய்து பொருத்தியதாகவும், அதனுல் ஸவிதாவுக்குப்பொற்கையனென்று பெயர் வந்ததாகவுங் கதை.

### வருக்கம் 4.

6. வதியு நீரினை வற்ற வடிப்பவ
னுதவி வேண்டிச் சவிதாவினை யுற்றுத்
துதிமுழக்குவந்; தோயவ னோன்பினி,
லதிவிருப்ப மடைந்துளம் யாங்களே.

(இ-ள்.) ஜலத்தை வற்றுவிப்பவனுகிய ஸவிதாவை உதவிக்காகத் துதிப்போம். அவனது விரதங்களை விரும்புவோம்—(எ-று.) இது ஹோதா, ஸாமகன், ரித்விஜன், சஸ்திரமுரைப்பவன் ஆகிய யாவரும் கூறுவது.

## அஷ்டகம் 1 அத்தியாயம் 2.

7. மாறிலாது விளக்குவோன், மாந்தர்க்குக்
கூறுசெல்வ விசித்திர நன்கொடை
கூறுசெய் தளிக்குஞ் சவிதாவினைத்
தேற லுண்டிடத் தேடி யழைப்பமே.

(இ-ள்.) மனிதர்களுக்கு ஒளியளிப்பவனும், மணி, முத்து, பொன் முதலிய விசித்திர வர்ணமான பொருள்களைத்தருபவனுமான ஸவிதாவைக் கூவுவோம்—(எ-று.) தேறலுண்டிடவென்பது வடமொழி மூலத்திலில்லை. செய்யப்படுவது சோமயாகமானதுபற்றி அச்சொற்றொடர்சேர்க்கப்பட்டது.

8. தோழர்கா ளிவண்டோய்க; சவிதாவும்
வாழி வல்லையிற் போற்றற்குரியவன்;
மாழை நந்தமை நாடி வழங்குவோன்
கேழுறுந் தனமீத்துக் கிளருவான்.

(இ-ள்.) தோழர்களே! இங்குவாருங்கள். ஸவிதா நம்மால் விரைவில் துதிக்கப்படத்தக்கவன். செல்வமளிக்கு மவன் பிரகாசிக்கிறான்—(எ-று.)

9. அங்கி யன்புறு தேவ மனைவியர்
தங்களை யிவட்சேர்க்க, துவட்டாவைப்
பொங்கு சோமம் பருக வருகினிற்
றங்குமாறு தயக்குக நன்மையின்.

(இ-ள்.) அக்கினியே! (இந்திராணி முதலிய) அன்புள்ள தேவ பத்தினிகளை இந்த யாகசாலைக்குக்கொண்டுவருக; துவட்டாவென்னுந்தேவனையும் சோமங்குடிப்பதற்காகக் கூட்டிக்கொண்டு வருவாயாக—(எ-று.)

10. வன்னி யௌவனம் வாய்ந்தவ தேவர்தம்
பன்னியர்களாம் பாரதி ஹோத்திரை
துன்னுகின்ற வரூத்திரி திடனை
மன்னுவித்திடல் மாறு வுதவிக்கே.

(இ-ள்.) கட்டிளமைவாய்ந்தவக்கினியே! (அக்கினியின் பத்தினியாகிய, ஹோத்திரையையும், (ஆதித்தியன் மனைவியாகிய) பாரதியையும், (சிறந்தவளாகிய) வரூத்திரியையும், (வாக்குத்தேவியாகிய) திஷணையையும், எங்களைக் காப்பதற்காகக்கூட்டிக்கொண்டு வருவாயாக—(எ-று.) பாரதி பாரதபத்தினி, பாரதன் ஆதித்யன், யாஸ்கர். திஷணை திடணை முதனீண்டு தீடணையாயிற்று.

வருக்கம் 5.

## மண்டலம் 1. சூக்தம் 22.

11. ஆருகின்ற தம்பத்திரந் தன்னமு
மேரிழந்து சின்னப்படா ரெம்வயிற்
பேருதவியுங் காப்பும் பிறங்கிட
வீர பன்னியர் தேவியர் மேவுக.

(இ-ள்.) கொஞ்சமும்வெட்டுப்படமுடியாத அழகிய (பத்திரம்) சிறகுள்ளதேவிமாராகிய வீரபத்நினிகள் எங்களுக்குஇரட்சணையையும் சுகத்தையுமளிக்குமாறு எங்களாற் சேவிக்கப்படட்டும், அதாவது இங்குவரட்டும்—(எ-று.) வீரபாலன தேவியர் மேவுக, வென்பதும் பாடம்; சாயணர் ந்ருபத்நய: என்பதற்கு நரர்களை (வீரர்களை)ப் பரிபாலிக்குந் தேவிமார் என்று பொருள்கொள்ளுவதால்.

12. இந்திராணியை யக்கினி தேவியை
முந்து வாருணி மூவரையு மொரு
தொந்தரையுந் துதையா தழகின்யாம்
நந்த, நாடுவேன் சோமம் பருகவே.

(இ-ள்.) எங்களுக்கு ஒரு கஷ்டமும் நேராதபடிச் சுகமமையும் வண்ணம், இந்திராணி, அக்கினாயி, வாருணி இம்மூவரையும் அழைப்பேன்—(எ-று.) இவர் முறையே இந்திரன் அக்கினி, வருணன் மனைவியர்.

13. எட்டும் வான் புவிவான மெனவிணை
யொட்டு மன்னவ ரொண்முறா னெய்ந்தவர்
புட்டி யீயும் பொருளெமக் கூட்டியெம்
மிட்டி தன்னைப் புரோக்கணஞ் செய்கவே.

(இ-ள்.) பெருமைவாய்ந்த வானதேவதையும் பூமிதேவதையும் எங்கள் யக்ஞத்தை தங்களது ஸாரம்பொதிந்த ரஸத்தால் புரோக்ஷிக்கட்டும் (தெளிக்கட்டும்.) பிற்பாடு எமக்குப்புஷ்டியைத் தரத்தக்க வஸ்துக்களை யளிக்கட்டும்—(எ-று.) புஷ்டி, இஷ்டியென்பன, புட்டி, இட்டி யெனத்தற்பவமாயின.

14. சோமங் காத்திடுங் கந்தருவன் பதத்
தேமமாக விசைகளை விப்பிரர்,
தோமஞ் செய்த பயனெனத், தோயத்தை
யேமநெய்போல் வளத்தி னுறுவரே.

(இ-ள்.) கந்தருவனது நிச்சயபதமாகிய அந்தரத்தில் விப்பிரர்கள் இசைகளைப்பாடி அதன் பயனாக நெய்போலப் புஷ்டியுள்ள ஜலத்தைப்பெறுவார்கள்—(எ-று.) சோமங்காத்திடுமென்ற அடை மூலத்திலில்லை. கந்தருவனது பதம் அந்தரிட்சவுலகமாம். கந்தருவநகரம் என்ற சொல் மேகத்தின் பெயராயமைந்துள்ளதன்மை யீண்டு கருதற்பாலது. அது இங்கு விண்ணைக்குறித்து நின்றது. இக்கந்தருவனது தொழில் சோமத்தைக்காப்பாற்றுவதென்பார் மேனாட்டாசிரியர், யட்ச, கந்தர்வ, அப்ஸரகணங்களுக்கிடம் அந்தரிட்சம் என்றுதாயநீயசாகையிற்கூறப்படுகிறது.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

15 இடமகன்று பிருதுவி யேய்கவே;
பிடரிலாது சுகத்தி னியைந்துறத்
தடமகன்ற சரணாலய மெமக
குடனளித் தருள்ளாங்குக வின்றுமே.

(இ-ள்.) பிருதுவியே! நீ விஸ்தீரண குணஸம்பன்னனா யமைக. கஷ்டமில்லாது நாங்கள் சுகப்படும்படி ஒரு விஸ்தாரமான சரணாலயத்தை எங்களுக்குத்தருவாயாக—(எ-று.)

### வருக்கம் 6.

16. விண்டு வேழெனும் வேதப்பண் பாடியே
யண்டலர் செறிபூமி யடக்கிய
மண்டலத்தின் மருவி யத்தேவர்க
ளண்டு நம்மை யழுகி னருள்கவே.

(இ-ள்.) விஷ்ணு எழுவிதமான வேதவிசைகளைக்கொண்டு பூமியில் நடமாடின அந்தவிடத்திலிருந்துகொண்டு தேவர்கள் நம்மைக் காக்கட்டும் —(எ-று.) அ, பண்டறிசுட்டு. தேவர்கள் விஷ்ணுவைத்தலைமையாகக்கொண்டு (காயத்திரி முதலாகிய) எழுவித வேதப்பண்களையும்பாடிப்பூமியிலுள்ள பாபிகளின் தொந்தரவைநீக்கினார்கள்; பூமியைச்சயித்தார்கள் என்றது தைத்திரீயம். இக்கதை திரிவிக்கிரமாவதாரத்தைச் சூசிப்பிப்பது என்பார் சாயணர்.

17. இவ்வுலகங்க ளெங்கணும் விட்டுணு
செவ்வை யாகத் தனதடி யோட்டியே
மூவ்வடியின் முழுது மளந்தகாற்
கவ்வு தூளியின் யாவுங் கலந்ததே.

(இ-ள்.) இவ்வுலகமுழுதும் மூன்றடியாலளந்த விஷ்ணுவின் பாதத்தூளி சேர்ந்து இவ்வுலகமாயிற்று—(எ-று.)

18. எல யாரு மிடர்செயாத் தன்மையான்
பாலனஞ் செயும் விண்டு தன்மூவடி,
ஞால தன்ம நடைபெற வோம்புவான்,
மேலெடுத்து விளங்க நடந்தனன்.

(இ-ள்.) ஒருவராலும் இம்சிக்கமுடியாத வலிமையுள்ளவனும், எல்லா ஜகத்துக்களையும் இரட்சிப்பவனுமாகிய விஷ்ணு பூமியில் நடக்கும் (அக்கினிஹோத்திராதி) தருமங்கள் நடைபெறுமாறு ஜகத்தை மூன்றடியாலளந்தான்—(எ-று.)

# அஷ்டகம் 1. அத்தியாயம் 1.

1. பல முறைந்துள சோமமும்; பற்பல
நல முறைந்திடு மாசி ரயத்தி னித்
தல முறைந்த சுதையினை, வாயுவே!
வல முறைந்திட வந்து பருகவே.

(இ-ள்.) சோமங்கள் (நிறையவிருப்பதால்) பலத்தோடு கூடியிருக்கின்றன; ஆசிர்வசனத்தோடுகூடிய இச்சுதையினை, (உத்தரவேதிக்குக் கொண்டுவரப்பட்டதை) வந்து குடிப்பாயாக—(எ-று.)

2. வானினைத் தொடுந் தேவர்கள் வாயுவோ
டான விந்திர னென்றிருவர்தமைப்
பான சோமம் பருகுதற் கென்றியா
ஞான மோங்கு மறையி னழைப்பமே.

(இ-ள்.) வானத்தைத்தொடுந் தேவர்களாகிய இந்திரவாயுக்களிருவரையும் இச்சோமத்தைக் குடிக்கக்கூவுவோம்—(எ-று.)

3. வாயுவிந்திரர் மன்னு மனோவேக
ராயு நன்மக நாயக ராயிர
மேயுங் கண்ணினர் தம்மை மறையவர்
தோயுதற் றுணை யாமெனக் கூவுவார்.

(இ-ள்.) மனோவேகமுள்ளவரும், கர்மத்தை (அல்லதுபுத்தியை)ப் பரிபாலிப்பவரும், ஆயிரங்கண்ணுடையவருமான இந்திரவாயுக்களைத் துணைக்காக விப்பிரர்கள் கூவுவார்கள்—(எ-று.)

4. நேர்ந்த தூவலி நீண்டவ ரென்று சீர்
வாய்ந்த தேவர்கள் மித்ர வருணர்க
ளாய்ந்து சோமத் துளியைப் பருகயா
மோர்ந்து கூவி யவரை யழைப்பமே.

(இ-ள்.) பரிசுத்தமான வலிமையுடையவரான மித்திராவருணர்கள் சோமம் குடிக்கவரட்டுமென்று (அநுஷ்டாதாக்களாகிய) நாம் அவரைக் கூப்பிடுகிறோம்—(எ-று.)

5. ஒழுக்கி னல்லொழுங் கோம்புவ ரவ்வொழுங்
கழுக்குறு மொளியார்ந்தத னாயகர்
வழுக்கு மித்ர வாருணர் தங்களை
பொழுங்கி னோக வரக்க வழைப்பெனே.

(இ-ள்.) ஒழுக்கினால் (சத்திய வசனத்தினால்) ஒழுங்கை (விரதங்களை) வளர்ப்பவர்களும், ஒளியமைந்த அவ்வொழுங்குக்கு நாயகருமான மித்திராவருணர்களை யான் அழைப்பேன்—(எ-று.)

## மண்டலம் 1. சூக்தம் 23.

6. வருணனெம்பெருங் காப்பாயமைபுக,
தருண நந்துணை யாவுந் தயக்கியே
யரண மாக வெமக்கு நன் மித்திரன்;
வருண மித்திரர் செல்வம் வயக்கவே.

(இ-ள்.) வருணனெமக்குப் பெரிய காவலாகவமையட்டும்; மித்திரனும் எமக்கு உதவியாகட்டும்; இருவரும் செல்வம் எமக்கு அளிக்கட்டும் —(எ-று.)

7. மருத்துவர்க்கு மிந்திரன் றன்னையே
பொருந்து சோமம் பொருந்திக் குடித்திட
வருந்தி யோமி மழைப்ப மவன் மிகத்
திருந்தி யெய்துக சேர்ந்த கணத்தொடே.

(இ-ள்.) மருத்துக்களோடு கூடிய இந்திரனைச் சோமங்குடிக்க அழைப்போம். அவன் (மருத்துக்) கணங்களோடு திருப்தியடையட்டும்—(எ-று.)

8. இந்திரற்கு முதன்மை யியைப்பீர்காள்!
சுதை பூடன் கொடைகளைப் பங்கிடு
மந்தம் வாய்ந்த மருத்துவ தேவர்காள்!
வந் தியாவரு மென் விளி கேட்கவே.

(இ-ள்.) இந்திரனை ஜேஷ்டனாகக்கொண்டவர்களும் பூஷனது தனக் கொடைகளை பங்கிடுபவருமான மருத்துவ தேவர்களே! எல்லாருமாக என் அழைப்பினுக்குச் செவிகொடுங்கள்—(எ-று.) பூஷன்=கன்று காலிகளை விருத்தி செய்யுந்தேவதை.

9. இந்திரனோ டுடையத்து விருத்திர
னந்த வாட்டுக நற்கொடைத் தேவர்காள்,
பொந்து மீவலிப் பூரிய துட்டனு
மெந்தமைக் கெடுக்காவணம் யாமுறல்.

(இ-ள்.) நல்லதானங்களிற்சிறந்த (மருத்துவ) தேவர்களே! இந்திரனோடு கூடி விருத்திரனைக்கொல்லுங்கள். துட்டனாகிய பகைவன் எம்மையடக்கமுடியாத வண்ணம் யாங்கள் சிறந்திருக்கட்டும்—(எ-று.)

## அஷ்டகம் 1. அத்தியாயம் 1.

10. மேவு சோமக் குடிக்கு மருதராக்
தேவர் யாரையுந் தேடி யழைப்பமால்
யாவருக்குந் தெரிந்த பிருசினி
யோவி னன்மக ருக்கிர மெய்தினர்,

(இ-ள்.) மருத்துக்கணத்திற்சேர்ந்த எல்லாத்தேவர்களையுஞ் சோம பானத்துக்காகக் கூப்பிடுவோம்; அந்தப்பிரசித்திபெற்ற பிருச்னி மக்கள் உக்கிரத்தன்மை யடைந்தனர்—(எ-று.) பிருச்னிமாதர: பிருச்னியைத்தா யாக வுடையவர் மண். 1, சூ. 14, ரி. 3, பார்க்க.

வருக்கம் 9.

11. நார்களே நீர் சுபமென நாடியே
மருவு யாகத் தலத்தை மருவும்போ
தாரமோடுஞ் செயவீர ருரையென,
வரமருத்துவர் வாக்கு முரப்புமே.

(இ-ள்.) மருத்துவர்களே! நீங்கள் சுபகர்மமான தேவயஜனத்துக்கு வரும்போது உமதுகுரல் வெற்றியாளர்களாகிய வீரரது குரலைப்போல் உரக்கச்சப்திக்கும்—(எ-று.) நார்களிண்டு மருத்துவர்களையே குறித்து நின்றது.

12. நகைதரு மின்னொளி பெறு மாருதர்
மிகவு மந்தர மெங்கணுந் தோன்றுவோர்
தகவுட னெமைக் காக்க, வெமதிடை
வெருசுகத்தை விளைத்துச் சிறக்கவே.

(இ-ள்.) ஒளி மிகுந்த மின்னலினது பிரகாசத்தையுடைய மருத்துவர் கள், அந்தர வெளியில் எல்லாப்பக்கத்திலுமுண்டாவோர் எமைக்காக்கட்டும், எமக்குச்சுகத்தையளிக்கட்டும்—(எ-று.)

13. சித்திரமாய்த் திகழ்ந்த தருப்பையி
னுத்தமர் மகந்தாங்கு மொருவனை
மெத்து காந்தி விரைகதிப் பூட வா
னித்தை நின்று மியைக்கல் கெட்டாவினே.

(இ-ள்.) பிரகாசத்தோடு கூடி நடைவிரைவுள்ள பூஷனே! சித்திர மாகவமைக்கப்பட்ட தருப்பையில் அமரும் யாகதாரண சீலனை (ஸோமனைக்) கெட்ட பசுவைக்கொண்டுவந்துசேர்ப்பது போல வானத்தினின்றுங் கொண் டுவருவாயாக—(எ-று.) 'தேவர்களைத் தாங்குவோனாகிய ஸோமனைத் தருப்பையிலமரும் பூஷனே கெட்ட ஆடு மாடுகளைக் கொண்டுவருவது போலக் கொண்டுவருவாயாக; எனப் பொருள் கொள்ளுவர் மேனாட்டாசிரி யர். இத்தை முன்னிலையசைச்சொல். கெட்ட ஆவின் எனப்பிரிக்க.

## மண்டலம் 1. சூக்தம் 23.

14. மின்னு சோதி விளங்கிய பூடனும்
வன்னம் பற்பல வாய்ந்திடு நாணலின்
மன்னு மன்னன் குகையினிற் கூடமாய்த்
துன்னுவானைத் துகளற வோர்ந்தனன்.

(இ-ள்.) பிரகாசம்பொருந்திய பூஷன் சித்திரமாகவமைக்கப்பட்ட தருப்பையிலுள்ள மன்னனாகிய ஸோமனைக்குகையினிடத்து வெகு இரகசியமாயிருக்கக்கண்டு, அவனையடைந்தான்—(எ-று.) குகையென்றது ஈண்டு இலகுவில் அடைய முடியாத விடத்தைக்குறித்தது. இராஜா ஸோமனும்.

15. இத்துளிகளோ டென்பொருட் டன்னவ
னெத்தவா றிருதுக்க மீண்டுமீண்
டித்தரையி னெருத்தி னுழுது நெல்
வித்தி யாண்டுதோ றுக்கும் விளைவென.

### வருக்கம் 10.

(இ-ள்.) இந்தஸோமத்துளிகளோடு எனக்காக அப்பூஷன் எருதுகொண்டு நிலத்தையுழுது நெல்விளைத்து வருஷந்தோறும் விளைவை யெடுப்பது போல் ஆறு பெரும் பருவங்களையும் மீள மீள அமைக்கட்டும்—(எ-று.) வடமொழிமூலத்தில் யவம் என்றுளது. யவம் கோதுமை போன்ற ஓர் தானியம்.

16. அத்துவர ருடன் பிறப் பானவர்
நத்து மம்மையர் நாடி யவர்வழி
பொத்தொழுகுவ பொன் மதுரத்தினை
யொத்த பாலிற் சுவையினை யூட்டியே.

(இ-ள்.) அத்துவார்களது பந்துக்க (சகோதரிக) ளுந், தாயருமான (ஜலங்கள்) பாலிற் சுவை யூட்டிக்கொண்டு அவ்வத்துவரர்களது பாதைக் கண்ணே செல்லும்—(எ-று.) தண்ணீரில்லாமல் யாகம் புரிவோர்க்கொரு வேலையும் நடவாதாதலின் அத்தண்ணீரைத்தாயென்றும் உடன்பிறப்பென்றும் உபசரித்தார்.

17. என் றருகி னிருக்குந் தணீ, ரன்றே
லென்றிரோடு மிணைபெற நிற்பவை
மன்ற யாங்க ளிழைத்திடு மிம்மகந்
துன்றி யுள்ளக் களியினைத் தோய்கவே.

(இ-ள்.) சூரியனுக்குச்சமீபத்திலிருக்கும் இத்தண்ணீர், அல்லது சூரியனோடு கூடக்கருதப்படுந்தண்ணீர் இம்மகத்தைச் சார்ந்துநின்று உவப்பையெய்தட்டும்.—(எ-று.) 'ஆபஸ் ஸூர் யோஸமாஹிதா' என்பது தைத்திரீய ஆரண்யகம் முதற் பிரபாடகத்திலுள்ளது.

# அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

18. கோக்கள் சென்று தண்ணீர்குடி யாபமா
மாக்க தேவிக ளார்ந்திவ ணண்மிடக்
கூக்குரலின் விளிப்பென்; குடிநைகட்
காக்கவற் றிவருகு மவியதே.

(இ-ள்.) பசுக்கள் சென்று குடிக்கும் தண்ணீராகிய தேவிகளைக் கூவுவேன். (ஓட்டத்திற்சிறந்த) ஆற்றுக்கு அவி தரத்தக்கது—(எ-று.) விந்துபி: என்பதற்கு ஓட்டத்திற்சிறந்த ஆபதேவதைகள் என்பார் சாயணர்.

(வேறு.)

19. நீர்க்கண் ணமுத நிலைபெற் றுளிரு
நீர்க்கட் பலமூலிகை நின்றுலவு
நீர்க்கண் ணுரைசீர் நிமிடத்துரை தந்
தேர்க்கண் ணமைக தேவ ரிவரே.

(இ-ள்.) ஜலத்தினுள் அமிர்தமும், ஜலத்திற் பேஷஜமும் உறையும்; தேவர்களே! (பிராமணர்களே!) அதன் பெருமையையுரைக்க விரைகுவீர்களாக—(எ-று.) 'பிரமாணர்கள் பிரத்தியட்ச தேவர்க' ளென்று தைத்திரீயஸம்ஹிதை கூறும்.

(வேறு.)

20. சோம னென்றனுக் குரைத்தனன் றோயத்தி னுப்பண்
வாம பேடசம் யாவுமே வளருமென், றவற்றோ
டோம வங்கியு முறையுமென்; றென்றுமே குறையாத்
தோயி னன்மருந் துறுத்து நீ ருரைத்தது மதுவே.

(இ-ள்.) ஜலத்தின் மத்தியின் எல்லா மருந்துகளும், அக்கினியும் வசிப்பதுண்டென்று சோமன் எனக்குச் சொன்னான். ஸர்வபேஷஜ? காரணனான ஆபனு மதனையே கூறினான்—(எ-று.) நீர், ஆபன், ஜலபிமானி தேவதை.

## வருக்கம் 11.

வேறு.

21. நோ யொழித்திடு மௌடதத்தினை
மேய வென்னுட லுய்ய வேண்டியே
தூய வாபமே தோய்த் தருளுக
காயு மென்னை நீடூழி காணவே.

(இ-ள்.) என்னுடைய சரீரத்துக்குக் கவசம் போன்ற மூலிகைகளை நீரானது நிறைத்தருளட்டும், யான் சூரியனை நீண்ட காலம் பார்க்குமாறு—(எ-று.)

## மண்டலம் 1. சூக்தம் 24.

(வேறு.)

22. நீர்க ளிவ்விடம் பாய்ந்து நீசெய்கெட்டுக யானும்
பார்த்தனி லறியாமையாற் செய்த பாவத்தைச்
சீர்கெடப் புரி துரோக கன்மங்களைப், பொய்யை,
யேர்கெடத் தந்த சாபங்க ளாதியவற்றை.

(இ-ள்.) யான் அறியாமற் செய்த பாபத்தையும், (தெரிந்துசெய்த) துரோக கர்மங்களையும், பேசிய பொய்களையும் நீரானது இவ்விடம் பாய்ந்து அப்புறம் நெட்டித்தள்ளட்டும்—(எ-று.)

23. இன்று நீர்களை நேடினேன்; னேடிப்பி னிவற்றி
னின்று பல்லொடு மிரதத்தை நிவப்புற வடைந்தேந்;
துன்று நீர்பொருந் தக்கினி சுறுக்கென வருக,
வுன்றன் காந்தியா லென்றனை நிரப்புக வுடனே.

(இ-ள்.) இப்பொழுது (யாக முடிவிற் செய்யும் ஸ்நானத்துக்காக) ஜலத்தை நாடிச்சென்றேன்; அச்சல ஸாரத்தோடு நாங்கள் கலந்தோம். ஜலத்தோடு பொருந்திய அக்கினியே சீக்கிரம் வருக, உனது காந்தியை (அப்படி ஸ்நானஞ்செய்யும்) என் தேஜஸோடு சேர்ப்பாயாக—(எ-று.)

24. அங்கி யுன்னுடைத் தேசொடு மெனை யமைத்திடுக;
தங்கு மாயுளுஞ் சந்ததி தம்மையுந் தருக;
அங்கமா யெனைத் தேவர்க ளுள்ளவா றறிக;
பொங்கு மிந்திர னிருடியருடன் புலன்கொளவே.

(இ-ள்.) அக்கினியே உன்னுடைய தேஜஸை எனதோடு சேர்ப்பாயாக; எனக்குத் தீர்க்காயுளும் சந்ததியும் தருவாயாக; தேவர்கள் எனது (யஜமானனுடைய) அநுஷ்டானத்தையறியட்டும். இந்திரனும் ரிஷிகணங்களோடு அவ்வநுஷ்டானத்தை யறியட்டும்—(எ-று.)

## 24. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 1.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன்; யடொழிச்சந்தம்: 1, 2, திருஷ்டுப் (அநு சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்); 3-5, காயத்திரி; 6-15, திருஷ்டுப் தேவதை: 1, யார்; 2, அக்கினி; 3 5, ஸவிதா; 6-15, வருணன்.

# அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

(வேறு)

1. அமர ரென்றுரைப்போர் தம்மி லநுகுலம் வாய்ந்த தேவன்
றமரென வுறைவோ னின்று சாற்றுதற் கியாவ னுள்ளான்?
அமைவலி யதிதி மாட்டு மீட்டெமை யமைத் தென்றாயை
யமல தந்தையினைக் காணுமா றெனை யார் சேர்ப்பாரே?

(இ-ள்.) மரணதர்மமில்லாதவர்களில் அநுகூலத்தைத் தரக் கூடிய
தேவன்யாரென்று தெரிந்து அவனுடைய சோபனநாமத்தை யான் யுச்சரிப்
பது? எம்மை மறுபடியும் பூமியிலேயே வைத்து எனது தாய் தந்தையர்
களைப் பார்க்கும்படி செய்யக்கூடிய (பிரஜாபதி) யார்?—(எ-று.)
இச்சுநச்சேபனது கதை ஐதரேய பிராஹ்மணத்தில் விஸ்தாரமாகச்
சொல்லப்படுகிறது. 'பூர்வம் அரிச்சந்திரனென்று ஒரு அரசனிருந்தான்.
அவன் வருணனை வேண்ட ரோஹிதனென்ற புத்திரன் பிறந்தான். பிள்ளை
பிறந்தால் அவனைப் பலியிடுவதாக வேண்டிக்கொண்டபடி ரோஹிதன் பெரி
யவனான பின்னர்த்தந்தை தன் நேர்த்திக்கடனைப்பற்றித் தெரிவிக்க ரோஹி
தன் காட்டுக்கு ஓடிப்போனான். அங்கே அஜீகர்த்தர் என்ற ரிஷி துன்பப்
பட்டுக்கொண்டிருப்பதைக் கண்டு தனக்குப்பதிலாக அவரது புத்திரர்களில்
ஒருவனை வருணபலியாகக்கொடுத்தால் யதேஷ்டமான தனங்கொடுப்பதாக
கூறி இடைச்சனான சுநச்சேபனைப் பலிக்காகக் கொடுப்பித்தான். சுநச்சே
பனை யூபஸ்தம்பத்திற் கட்டினார்கள். அவ் யாகப் பிராமணர்கள் பதினா
ரில் விச்வாமித்திரர் ஒருவராயிருந்தார். அவர், வருணப்ரீதியாக ஸ்துதி
பாடச்சொல்லிச் சுநச்சேபனைத் தூண்டினார். உடனே சுநச்சேபன் 9
இருக்குக்களடங்கிய 6 சூக்தங்களைப்பாடவே வருணன் திருப்தியடைந்து
சுநச்சேபனைக் கட்டவிழ்த்து விடும்படி உத்தரவளித்தான்.' என்பது கதை.
அதிதி=பூமி. இச்சொற்கு மேனாட்டுரைகாரர்கள், அகிலாண்டமென்றும்
இயற்கையென்றும், மோட்சமென்றும் அநகத்துவமென்றும் பற்பலவா
சிறப்பித்து உரை கூறுவர்.

2. அமரரின் முதன்மை வாய்ந்த வக்கினி தேவனும
நமவென நினைப்போம் யாங்க ணலந்தரு சுபத்தை நாடி;
யமைவலி யதிதிமாட்டு மீட்டெமை யவ னமைப்பா
னிமையி லென் றந்தை தாயை யெண்ணி யான் காணுமாறே

(இ-ள்.) தேவர்களில் முதன்மையான அக்கினியினது சோப
நாமத்தை நாம் சிந்திப்போமாக. அவன் நம்மை மறுபடியும் பூமியின்கண்
ணுய்த்து எனது தாய் தந்தையர்களைப் பார்க்குமாறு செய்வான்—(எ-று.)

## மண்டலம் 1. சூக்தம் 24.

(வேறு.)

3 உபத்தி னென்று முதலி யியற்றிடும்
வைத்துயர்ந்த நல்லைத்தவுக் கீசனுங்
காத்துயர் சவிதா வன்றன் மாட்டியா
மருத்தியோடு பங் கிகென யாசிப்போம்.

(இ-ள்.) (அக்கினியினுற் பிரேரேபிக்கப்பட்டுப் பின்வரும் மூன்று இருக்குக்களால் ஸவிதாவைத் துதிக்கிறான்.) எப்பொழுதுங் காப்பவனே! ஸவிதாவென்னுந் தேவனே, சிறந்த பொருள்கட்கு ஈசானனே (நாயகனே) செல்வந்தரும்படி உன்னை (எப்பொழுதும்) யாசிப்போம்—(எ-று.)

4. நிந்தை யேற்படு முன்னர் நிலைத்திட்ட
வந்தனை புகழ் வாய்ந்திடு பாக்கிய
முந்து வெம்பகை முற்று மில்லாதது
தந்து நின்றது முன்கரத் தன்னிலே.

(இ-ள்.) (ஸவிதாவே!) நிந்தை யேற்படுவதற்கு முன்னரே உன்னிடத்து நிலைத்திட்டதும், அந்நிந்தைக்கு முன்னும் பகைக்கப்படாததும், எல்லாராலும் போற்றப்பெற்றுப் புகழ் வாய்ந்ததுமான செல்வம் உன் றஸ்தங்களில் கொடுக்கப்பெற்றது—(எ-று.) தந்து நின்றது தர நின்றதென்னும் பொருளில் வந்தது.

5. பொன் பொருந்திய வன்பெறுங் காவலின்
மன்னுமோர்ந் சிறப்பெய்துற யாங்களுந்
சொன்னப் போற்றினிற் சேரு முதன்மையை
நன்னரின் யாந் தொடங்குற நாடியே.

(இ-ள்.) (ஸவிதாவே!) உன்னைச்சேர்ந்த (சுநச்சேபனது நாமத்தோடு கூடிய) யாங்கள், தனம் பொருந்திய உனது இரட்சணையிற் சிறப்பாகப் பாந்து நிற்போமாக, தனம் படைத்தோரில் முதன்மையையடைய ஆரம்பிக்கும் வண்ணம்—(எ-று.) பக பக்தஸ்ய என்னுஞ் சொற்றொடருக்குப் பகன் என்னும் தேவன் பிரித்துக்கொடுக்கும் என்பார், மேனாட்டாசிரியர். பகன், விதி, ஊழ், அதிர்ஷ்ட மென்பன ஒரு பொருட்கிளவிக ளென்பாரவர். அவருரைப்படி, செய்யுள் பின் வருமாறு.

மன்னு தன்னை வணங்கினார்கட்குப்
பொன்பகிர் பகன் பூரித்தளித்திட்ட
நன்னிதியிற் றலைமையை நண்ணுவ
முன் னிருந்துனை யுன்னி யடைந்துமே.

வருக்கம் 13.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

(வேறு.)

6. வானத்துப் பறந்துசெல் லப்பறைவக ளுனது மெய்யின்
மானத்தை யேனுங் கோபம் வல்லமை தம்மையேனு
மினத்தி [illegible] பெற்றுச் சிறந்ததே யில்லை; யென்றுந்
தானத்தை யாற்று நீர் கா லுன்கதி சருவிடாவே.

(இ-ள்.) ஆகாயத்தில் பறக்கும்போது காணப்படும் (சேனம் முதலிய) பட்சிகள் உனது சரீர பலத்தையாவது, பராக்கிரமத்தையாவது (உனது கோபத்தையொத்த) கோபத்தையாவது அடைந்ததில்லை; நிமிஷந்தோறும் நடக்கிறதும் ஜலமும் வாயுவும் உன் (வேகத்தையொத்த) வேகத்தையடைய மாட்டா—(எ-று.) இதுமுதல் இச்சூக்தங் கடைசிப்பாட்டு வரையில், ஸவிதா வால் பிரேரேபிக்கப்பட்ட சாக்சேபன் வருணனைத் துதித்த இருக்குகளாம்.

7. தூய்மைபாம்வலிமைத்தோய்ந்துகளறுவருணமன்னன்
செம்மை வா னுறையும் வேரின் மருவிய மரத்தா ணோராய்
வாய்மை நிறுத்துவா; னம்மரத் தொளிக்கற்றைக் கீழ்நோக்
கெய்க்கொளிகாலு;மன்ன வெம்முணன்கழுந்தித்தோய்க.

(இ-ள்.) சுத்தபலத்தோடு கூடிய ராஜாவானவருணன், அந்தரிட்சத்தில், மேற்பக்கத்து வேரோடுகூடிய மரத்தினது தாளை நேராக நிறுத்திப் பிடிப்பான். அம்மரத்தினது கிரணங்கள் கீழ்நோக்கிப்பிரகாசிக்கும்; அவை யெமக்குள் நன்றாகப் பொருந்தி மறைக—(எ-று.) இம்மரம் ஸர்வ ஜீவவிருட்சம் போலும் என்பார் மேலுரையாசிரியர். ஊர்த்துவ மூலமதச்சாகமச்வத்தம் [illegible] (அத் 15. ச்லோ. 1.) என்னும் கீதா வாசகத்தை இது [illegible]கிறது.—வேர்மேலுங் கிளைகள் கீழுமாகவுள்ள அரச மரமழியாத [illegible] என்பது பொருள்.

8. மன்னனும் வருண னென்றூழ் வழங்கவென் றகன்ற பாதை
தன்னுவித்திட்டான் முன்னர்வழியொன்றுந்தோய்ந்திலாது
மன்னிடத் தவன்றன் பாத மருவிடப் பணித்தா; னெஞ்சி
னின்னல்செய் பகைவரையெல்லா மெச்சரித்தோட்டினனே.

(இ-ள்.) மன்னனாகிய வருணன் சூரியனுக்கு அகலமான வீதியையேற்படுத்தினன். முன்பாதம்வைக்கமுடியாதிருந்த விடத்தில் நடந்து செல்லக் கூடிய மார்க்கத்தை யேற்படுத்தினன். மனத்துக்குத் துன்பந்தருஞ் சத்துருக்களை யெச்சரித்து ஓட்டிவிட்டான்—(எ-று.) அகலமானவீதி உத்தராயனதட்சிணாயனவீதியென்றும், என்றூழ்வழங்கவென்பது சூரியன் உதித்து அஸ்தமிக்கவென்றும் பொருள்கொள்ளுக. யூபஸ்தம்பத்தில் கட்டப்பட்டுக்கீழே [illegible] கால் வைக்க முடியாமலிருந்த இடத்தில் பந்தவிமோசனஞ் செய்து [illegible] வாழ்விக்கும் வண்ணஞ் செய்தானென்று சாக்சேபன்சொன்னபடி.

# மண்டலம் 1 சூக்தம் 24.

9. மன்ன! நூறன்று வாய்ந்த வாயிர மருந்து முன்மாட்
டுன்னியே யுறைவ; வுன்ற னுபகார நீண்ட கால
மன்னுவ; நிருதி யெம்மை மருவலா தகற்றுய் தூரம்;
தன்னமாம் பாவ மேனுந் தவிர்த் தெமை விடுவிப்பாயே.

(இ-ள்.) மன்னனே! (வருண) நூறல்ல ஆயிரம் மருந்துவகைகளும் உன்னிடத்துண்டு. உனது அநுக்கிரக புத்தியானது விஸ்தீரணமாக வமைந்துள்ளது. அதனால் நிர்ருதி (பாபதேவதை) எம்மையணுகாமல் அதனைத் தூரத்தோட்டுவாயாக; சொற்பப் பாபமென்றாலும் அதனை நீக்கி எம்மைவிடுவிப்பாயாக—(எ-று.)

10. இரவினி லுயர்ந்த வானி னிருந் தொளிகாலு மீன்க
டரவழ கிழந் தொளிந்து பகலினி லெங்ஙன் சாரும்?
வருணன தாணை தாண்டும் வலியுளா ரெவரே? யல்லில்
விரவிய வொளியிற் றுரா வேந்தனு மொழுகுவானே.

(இ-ள்.) இரவில் ஆகாயமத்தியிற் காணப்படும் நட்சத்திரங்கள் பகலில் ஒளியிழந்து எங்கே செல்லக்கூடும்? வருணராஜனுடைய ஆக்ஞையை ஒருவராலுங் கடத்தல் முடியாது. இரவில் சந்திரனும் விசேஷப்பிரகாசத்தோடு வருகிறான்—(எ-று.) அதனால் நீங்கள் மயங்கவேண்டாம், நட்சத்திரங்களும் மீண்டுங் கண்ணுக்குப்புலப்படும் என்றுமுடிக்க. மீன்கள் சப்தரிஷிக் கூட்டமென்பது வாஜஸநேயி. ஆனல் நிருக்தக்காரர் பொதுவாக எல்லா நட்சத்திரங்களையுங் குறிக்குமென்பார். வருணன் இயற்கையில் நடக்குங் காரியங்களை யொழுங்குபடுத்துந் தேவதை யென்பார் வாலிஸ் (Wallis).

11. மறைகளை யுரைத்து நானும் வணங்கியே யிதனைக் கேட்பே
னுறைதனைக் கரங்கொண் டுன்னை யஜமானன் வேண்டுகின்று
னறை யநாதரவு கொள்ளா தறிந்திடாய் வருண! நீண்ட
தறையுக மரச! வெங்க ளாயுளைக் கடிந்திடாயே.

(இ-ள்.) பிரஹ்மணங்களைக்கூறிவந்தனஞ்செய்துகொண்டே நான் உன்னைக்கேட்படுகொன்றுண்டு. கையி லவியை யேந்திக்கொண்டு யாககர்த்தா உன்னைப்பிரார்த்திக்கிறான், ஆநாதரவு செய்யாமல் எங்களது அபேட்சைகளை யறிக. பரந்தகீர்த்திவாய்ந்தவருணனே! எங்களது ஆயுட்காலத்தைக் குறைத்துவிடாதே—(எ-று.) இவ்விருக்கு தத்வாயாமி.............ஆயுப்ரமோஷீ: என்றது.

## அஷ்டகம் 1 அத்தியாயம் 2.

12. இரவினும் பகலுமிந்த வொருமொழி யெனக்குச்சொல்வார்,
தரமுற வதையே யென்ற னிதயமு மெனக்குச் சாற்றும்;
விரவுநான் டளையின் வேந்தன் யாவனைச் சுநச்சேபன்று
துரமொடு அதித்தா னந்த வருணனு மெமை மீட்பிக்கல்.

(இ-ள்.) இரவும் பகலுமாக இந்தவொருவார்த்தையையே எனக்குச் சொல்லுவார்கள்; எனது இதயமும் அதனையேயெனக்குச் சொல்லும். சுநச்சேபன் எந்தராஜாவைத்துதித்தானோ அந்தராஜாவாகியவருணன் எம்மை மீட்டித்தாட்டும்-(எ-று.) எம்மை என்பதும் சுநச்சேபனையே குறித்ததென்று சாயணர் உரை கூறுவர்.

13. மும் மரங்களினிற் கட்டுப்பட் டிடர்முழ்கி நின்று
விம்முறு சுநச்சேபன் றுதித்தியன் றன்னை யிவ்வா
றிம்மென விரந்தான்; மாற்று ரெதிர்க்கலா வலியின் ஞானச்
செம்மலாம் வருணன் சேர்ந் தின்னனைப் பாசத்தி னீக்கல்.

(இ-ள்.) மூன்று (யூப) மரங்களிலுங் கட்டுண்டுவருந்துஞ் சுநச்சேபன் அதிதிபுத்திரனுகிய வருணனை யிவ்விதமாக யாசித்தான். பகைவரால் எதிர்க்கமுடியாத ஞானவரசனுகிய வருணன் இவனைப்பாசத்தினின்றும் நீக்கிவிடட்டும் (எ-று.)

14. வருணனே யுன்னை யாமும் வணங்கி யாகம்புரிந்து
தருமா நல்லவியைத் தந்து தாழ்க்கின் சினத்தை யென்போ
மிருணிறை யா மிழைத்த பாவத்தைச் சிதில மாக்கி
யருளுக ஞான மார்ந்த வசுரனே யரசே யின்றே.

(இ-ள்.) வருணனே! உன்னையாங்கள் வணங்குவதோடு அவிர்ப்பாகத்தோடுகூடிய யக்ஞங்களால் உபசரித்து உனதுகோபத்தை மாற்றுகிறோம். ஞானநிறைந்தஅசுரனே, யரசே, எங்கள்செய்கைகளிலுள்ள பாபத்தை மாற்றுவாயாக—(எ-று.) அசுரன்—அநிஷ்டத்தை நீக்குவதிற்சிறந்தவன் என்பது பதப்பொருள். இப்பொருளில் இதுதேவனைக் குறிக்கும். வேதத்திற்பலவிடங்களில் இந்திரனையசுரனென்பார். முற்காலத்து தேவாஸுரபதங்கள்பரியாயநாமங்களாயிருந்ததுண்டு. பிற்காலத்துத்தான் அவற்றின்பொருள்மாறினது. ஜெண்ட்வேதக்காரர்கள் (பார்ஸிக்கள்) இன்னும் தேவனை அஹுர் எனவே யழைப்பார்கள். சிதிலம்—ஜீரணம், தளர்ச்சி.

15. தலையிடை காலின் மூன்றி னெனைக்களை பாசந் தம்மை
நிலை தளர்ந் தேருமாறு நிறுவுக வதிதி பெற்றோய்!
புலைவறு மூன்ற னீதி யோதிய நெறியின் வைகி
மலைவுறு பாவ நீங்கி யதிதியை மருவுமாறே.

(இ-ள்.) மேல் கீழ் நடுவென்னும்பக்கங்களில் கட்டப்பட்டிருக்கும் எனது கட்டுக்கள் தளருமாறு புரிவாயாக, அதிதிபுத்திரனாகிய வருணனே! உனது கேடில்லாத நீதியின் வழியே நடந்து எங்கள்பாபங்களை நீக்கிக் கொண்டு நாங்கள் அதிதியையடையும்வண்ணம்—(எ-று.) அதிதியையடைதலாவது துன்பநீங்கிச் சுயேச்சையடைந்து சுகப்படல்.

வருக்கம் 15.

## 25. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 2.

21 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன்; வடமொழிச்சந்தம்: காயத்திரி; தேவதை: வருணன்.

1. நாளுநாளு நார்களே யாகலி
ஞளுந் தேவ வருண வு னல்லதீர்
கோ ளுலைவுறுங் கொள்கை விதியினை
மீள மீளக் கடந்து நடப்பினும்.

(இ-ள்.) வருணனே! எப்படி உலகத்தில் ஜனங்கள் பிரமாதம் புரிந்து விடுகிறார்களோ அதுபோல நாங்களும் அவர்களைப் போல மனிதர்களாதலால் தினந்தோறும் உனது விரதாநுட்டானங்களில் தவறினபோதிலும் —(எ-று.) (எங்களை மன்னிப்பாயாக) எனக்கூட்டுக.

2. சீற்றஞ் கொண் டெமைச் சேதித் தழிக்கவும்,
வேற்றுத் திகினை வுற்றவெ் வேளையின்
மாற்றலாத வெகுளி மடுக்கவுங்,
கூற்றி னல்லிரை யாகக் கொடுக்கலே.

(இ-ள்.) கோபங்கொண்டு எங்களை வதைக்கவும், அநாதரவு செய்யவெண்ணம் வந்தபோது எங்களை உனது கோபத்தியின் வீழ்த்தவும், விஷயாநுபவங்களுக்கு இரையாகக்கொடுத்து விடாதே—(எ-று.) கூற்று = ஈண்டு விஷயாநுபவத்தின் மேனின்றது.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

3. மன்னு தாமம் வயங்குங் குதிரையைத்
துன்னு புல்லுணச் சூதன் பிணித்தலி
னன்னயச் சுக நாங்கள் பெறப்பண்ணுற்
பின்னுமேவா முன் மனத்தை வருணனே.

(இ-ள்.) சாரதி புல்லுண்ணுவதற்காகக் கயிறுகட்டிய குதிரையை மெட்ச்சற்றளவிற் கட்டுவதுபோல, எங்களது சுகத்தின் பொருட்டுத் தோத்திரங், வருணனே, உனது மனத்தைக்கட்டுவோம்—(எ-று.)

4. வான் வழங்கும் பறவைகள் மன்னுகூ
டென்று வீழுங் கணக்கென யாவருங்
கூன் மனத்தொடு கூடி யெனைத்துறந்
தான்ற செல்வ மடைய விரைவரே.

(இ-ள்.) பறவைகள் கூட்டினருகிலேயே சுற்றுவது போல எல்லாரும், திருஷ்ணையோடு என்னைவிட்டுவிட்டுப் பொருளைநாடி யலைகிறார்கள்—(எ-று.) இச்செய்யுள் மேனாட்டாசிரியரது மொழி பெயர்ப்புக்கியைபச்செய்தது. எனை, சுனச்சேபனைக் குறித்தது யென்றது.

5. எஞ்சுகத்துக் கெக்காலம் வலியெனுங்
கஞ்சுகத்தை யணிந்த நரன்றனை
விஞ்சு தூர திருட்டி வருணனை
யெஞ்ஞன்று தெங்கருமக் கழைப்பமே?

(இ-ள்.) வலிமிகுந்து கீர்த்தி வாய்ந்தவனும், நரனும், தூரதிருஷ்டி (வெகு விஷயங்களை நோக்குபவன்) யுள்ளவனுமான வருணனை யாங்கள் சுகமடையும்பொருட்டு, எப்பொழுது எங்களது கருமங்களை நோக்கி வருமாறு செய்வோம்?—(எ-று.)

### வருக்கம் 16.

6. களிப்பினோ டிதைக் கண்டிரு தேவரு
மொளிப்பி லெம்மவி யுண்பர் பொதுவினே;
சலிப்புறுது நோன்பாற்று மகன்றனை
நலித்த லென்று மவர்நடை யல்லவே.

(இ-ள்.) யாவராலும் விரும்பப்படத்தக்க மித்திராவருணர்கள் இருவரும் யாங்கள் தரும் அவியைப்பொதுவாக உண்கிறார்கள். கர்மாநுஷ்டான பராயண தாசஷனுக்கு அவர்கள் பிரமாதம் விளைப்பதில்லை—(எ-று.) வேகந்தா வென்பதற்கு மேனாட்டாசிரியர் களிப்போடு என்று பொருள் கொள்ளுவார். அவரே திடமென்று இப்பாட்டில் மித்திரா வருணரிருவரையும் பற்றின் இந்த ரிக்குக் கூறவேண்டுமென ஆசங்கித்து இது பின்னர் இடைப்புகுத்திய செய்யுளாயிருக்கவேண்டுமென்பர்.

# மண்டலம் 1. சூக்தம் 25.

7. அந்தரத் தூப் பறந்துசெல் வீக்களின்
சந்தரம் பெறு பாதையை யோருவன்,
நந்து மாக்கட லூபக ஹேதுவின்
அந்தி லோடு நாவாயு மறிவனே.

(இ-ள்.) இவ்வருணன், ஆகாசமார்க்கத்திற் செல்லும் பட்சிகளின் பாதையை யறிவான், கடலில் வஸிப்பவனாதலின் கப்பல் செல்லும் நெறி களையுமறிவான்—(எ-று.) அவன் எங்களைக் கட்டவிழ்த்து விடுகவென முடிக்கவென்பார் சாயணர். வீ, பறவை. வருணன், கடலுக்கும் வானுக்கு நாயகன்.

8. அவன், விரதக்க ணமைந்து, நடைபெறுந்
தவம்பொருந்து தம்புத்திரர் தம்மொடு
திவம் பொருந்துறு மாறிரு திங்களை
நவம்பொருந்து பின்றிங்களை யோர்வனே.

(இ-ள்.) விரதானுட்டானத்திற் சிறந்து, அவ்வருணன், (நாள்களாகிய) புத்திரர்களோடு விளங்கும் பன்னிரண்டு மாதக்கணக்கினையும், அதனோடு புதிதாகவுண்டாகும் அதிகமாஸக் கணக்கினையும் அறிவான்—(எ-று.) சாந்திரமான மானதுபற்றித் திங்கள் என்றார். இச்சாந்திரமானம் தற்காலம் ஆந்திரதேசநடப்பு; தமிழர்களது ஸௌரமானமாம்.

9. உன்னதத்தி னுயர்ந்து விசாலமாய்
மன்னி நோக்கப் பெரிதாய் வயங்கி, யோர்
துன்னு காலினைத் தோய்வுறு பாதையை,
புன்னி மேலுறை தேவரை யோருவான்.

(இ-ள்.) விஸ்தீரணமாயோங்கிப் பார்ப்பதற்குப் பெரிதாயுள்ள வாயு (காற்று) செல்லும் பாதையை யறிவான்; அதற்கு மேல் வசிக்குந் தேவர் களையுமறிவான்—(எ-று.) வருணன் தோன்று எழுவாய்.

10. திண்மை நோன்பு சிறந்தவன் சோபன
கன்மம் வாய்ந்த வருணன் கடைத்தலை
யண்மித் தன்பிரசைக்க ணமருவா
னெண்பெறு மரசாட்சி யியையவே.

(இ-ள்.) திடவிரதனும், சோபன கர்மமுள்ளவனுமாகிய வருணன் தனது ஜனங்களிடத்து வந்து அவர்கள் மத்தியில் வீற்றிருப்பான் அவர்களை யாளும்பொருட்டு—(எ-று.)

வருக்கம் 17.

## அஷ்டகம் 1 அத்தியாயம் 2.

11. அங்கிருந் தெலா வற்புதமு முணர்ந்
திங்கு முன்னர் நடைபெற் றெழில்மிகப்
பொங்கு கன்மமும், போதும் புதுவது
மங்க யாகவே நோக்கி யளைவனால்.

(இ-ள்.) அவ்விடத்திலிருந்து எல்லாவற்புத கன்மங்களையுமுணர்ந்து, இவ்விடத்து முன்பு நடந்தேறிய காரியங்களையும், இனி நடக்கவேண்டிய புதுக்காரியங்களையும் நன்றாகப்பார்ப்பான்—(எ-று.)

12. என்று மெந்தமக், கெவ்வகை ஞானமுந்
துன்றி நிற்கப் பொலியு மாதித்திய
னன்று சாரு நெறிகளை நாட்டுக;
வொன்று மாயுளு மோங்க வமைக்கவே.

(இ-ள்.) சோபப்ரக்ஞையோடுகூடிய வவ்வதிதிமகனாகிய வருணன், எப்போதுமெங்களுக்கு நன்னெறியை யேற்படுத்தட்டும்; எங்களது ஆயுட்காலத்தை விருத்தி செய்யட்டும்—(எ-று.)

13. இரணிபத்தி னியன்ற கவசத்தை
யரணைப் புனைந் தாரும் வருணனுங்
கிரணம் வாய்ந்த வுடையிற் கிளர்ந்தன
வருண காந்தியு மெங்கு மமைந்ததே.

(இ-ள்.) ஸ்வர்ண கவசந்தரித்து வருணன் தன் பெருத்தவுடலைக் கட்டுகிறான். அதன்கிரணமும் எல்லாப்பக்கமும் வீசுகிறது—(எ-று.) 'வருணதூதருஞ் சூழ்ந்து மலிந்தனர்,' என்பது மேனாட்டாசிரியர் உரைப்படி [illegible]யாம். அவர் மோட்சமூலரது புராதன ஸம்ஸ்கிருதபாஷா சரித்திரம் 536-வது பக்கத்தினைத்தம்மொழிபெயர்ப்புக்கு மேற்கோளாகக்காட்டுவர். வருணதூதரென்றது இதர அதிதிமக்கள்போலுமென்பார்.

14. அரிகள் பாரு மடையுறார் தேவனை;
நரர் நடுங்கக் கொடுமை நடத்துவோர்
திருகு சிந்தைத் தொழிலரு மன்னனை
விரகு செய்து மெலிக்க வணைகுறார்.

(இ-ள்.) வைரிகள் எவரும் (வருணதேவனுக்கஞ்சி) அத்தேவ னிடத்து வரமாட்டார்; மனிதர்களைக்கொடுமையாக நடத்துவோரும், பாப புத்தியுள்ளவருங்கூட அவனைத்தொடமாட்டார்கள்—(எ-று.)

## மண்டலம் 1 சூக்தம் 25.

15. மக்களுக்குக் குறைவின்றி மாண்டசீர்
மிக்க வுண்டியை மென்மையி னீபவ
னெக்க வெம் முதரத்துக்கு மொல்லெனத்
தக்க பூரணத் தன்மையி னுக்குவான்.

(இ-ள்.) மனிதர்களுக்கு வேண்டிய கீர்த்தி பொருந்திய வன்னத்தைக் குறைவில்லாமல் எப்பொழுதுங் கொடுப்பவன் (வருணன்) அப்படியே எமது வயிற்றுக்கு வேண்டியவற்றையும் பூரணமாக விரைவிற்றருவான் —(எ-று.)

வருக்கம் 18.

16. ஆக்கள் கொட்டி லணைவது நோக்கவிங்
கூக்கு மென்னறி, வோங்கிய தூரநோக்
காக்கு மன்னவன் றன்னை யணையவென்
றேய்க்கு மீவிருப் போடு மியைவுறும்.

(எ-று.) கொட்டிலை நோக்கிப் பசுக்கள் போவதுபோல, (சுநச்சேபனுடைய) என்னுடைய புத்திகள், தூரதிருஷ்டியோடு கூடிய அவ்வருணனிடத்துச் செல்கின்றன—(எ-று.) கவ்யூதி: மேய்ச்சற்றரை யென்பார் மேனாட்டாசிரியர், கொட்டிலென்பார் சாயணர். இனியுள்ளவிடம் என்பதை யது குறித்து நின்றது.

17. மீண்டு மோர்முறை மேவி யளவளா
யீண்டுவோம், வரலேனினி, னென்மது
வீண்டு கொண்டுநந் தேய்ந்தது யாகவான்
றூண்ட விச்சையிற் றோய்ந்ததை யார்குவை.

(இ-ள்.) என்னால் மதுவானது இங்கே ஸம்பாதித்து வைக்கப்பட்டிருப்பதால், இன்னொருமுறை நாம் உரையாடுவோம். ஹோதாவைப்போல நீயும் உனக் கிஷ்டமானதை யுண்கிறாய்—(எ-று.) யாகவானென்றது ஹோதாவைக்குறித்து நின்றது. தூண்ட உவமைப்பொருளில் வந்தது. யாகவான் பிரேரேபிக்கவென்னலுந் தகும்.

18. கண்டனெ னின்றியாவர்தங் கண்ணினும்
விண்டு தோன்று மவனை யவனிமேன்
மண்டு தேரின் மகிழ்ந்து வருவதைக்;
கொண்டன னவ னென்று தி யீதெலாம்.

(இ-ள்.) எல்லாருடைய கண்ணுக்குந்தோன்றுமவனை (வருணனை)ப் பூமியின்மேல் தேரின்மீது உண்மையாகவே கண்டேன். என்னுடைய இத்துதியையெல்லாம் அவன் ஏற்றுக்கொண்டான்—(எ-று.)

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

19. ஈண்டு கூவி யழைப்பதை யேன்றுகே;
ஆண்டெமை யருள்பாலிக்க வின்றுநீ;
வேண்டு மென்றுன் றுணையை விழைந்துநான்
வேண்டினே னுன்னை யெண்ணி வருணனே.

(இ-ள்.) வருணனே! நான் கூவியழைப்பதனுக்குச் செவிகொடுப் பாயாக. எங்களையாட்கொண்டு எங்களுக்குச் சுகத்தைத்தருக. என்னைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆசையோடு உன்னை நோக்கித் துதித்தேன் —(எ-று.) 'இது இமம்மே வருணத்வாம வஸ்யுராசகே என்ற இருக்கு.....

20. ஞான மார்ந்தவ பாகம் புவியொடு
மோனமி லெச்சகத்து மொளிர்கிறாய்;
ஈன மின்றி யா மின்பமடைய நீ
தானுங் கேட்டெதி ராசியைச் சாற்றலே.

(இ-ள்.) மேதாவியே! (வருணனே) ஆகாசம், பூமி முதலிய எல் லாச்சகங்களிலும் நீ விளங்குகிறாய். நாங்கள் க்ஷேமத்தையடையும்படி நீயுஞ் செவிகொடுத்து எங்களைக்காப்பதாகப் பிரதியுத்தரந் தருவாயாக—(எ-று.) ராஜஸி என்பதற்கு விளங்குகிறாயென்றதைபடி அரசு செலுத்துகிறாயென் றும், யாமனி என்பதற்கு க்ஷேமமடையும்பொருட்டு என்றதைபடி, வழியில் போகும்போது என்றும் மேனாட்டாசிரியர் உரை கூறுவார்—(எ-று.)

21. மூடி வயங்கு முடியை யவிழ்க்கவே,
நடுவொளிருந் தளையை நசித்திட,
வடிவி லேன்றிடு கட்டை யகற்றுக,
படியில் யானும் பரிந்து சீவிக்கவே,

(இ-ள். உலகத்தில் யான் ஜீவித்திருக்குமாறு தலை, உடல், கால் இவற்றிலுள்ள கட்டுக்களை யறுத்து விடுவாயாக—(எ-று.)

வருக்கம் 19.

## 26. மண்டலம் 1. அநுவாகம் 6 சூக்தம் 3.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன்; வடமொழிச்சந்தம்: காயத்திரி; தேவதை: அக்கினி.

1. வலிமை யுண்டி வளர்க்கு மதிபதி,
நல்மை சாரவி யேற்கத் தகுந்தவ,
சுலவு முன்றன் சுவாலை யுடைதரித்
திலகு மிவ்வெ மக நிறைவேற்றலே

(இ-ள்.) ('அக்கினி தேவர்களுக்கெல்லாம் முகமாதலால் அவனைத் துதிப்பாயாக' வென்று வருணன் சொல்லச் சுநச்சேபன் இவ் விரண்டு சூக்தங்களாலும் அக்கினியைத் துதிக்கிறான்.) எக்கியத்துக்கு யோக்கியமானவனே! வலிமைக்குக்காரணமான அன்னத்தை வளர்க்கும்பதியாகிய அக்கினியே! உன்னைச்சூழ்ந்துள்ள சுவாலையாகிய வஸ்திரத்தைக்கட்டிக் கொள்க (கொழுந்து விட்டெரிக). எங்களுடைய இந்த யக்ஞத்தைச் செய்து முடிப்பாயாக—(எ-று.) மேற்சொன்ன வருணன் கூற்றை ஐதரேயப் பிராமணம் 7-16ற்காண்க.

2. என்று, மங்கி, யிளமை சிறந்தவ
னன்று மேன்மையைத் தோய்ந்தவ, தேசொடு
மொன்றி யோம முதற்றி யொளிபெற
நின்ற வாசகப் போற்று நிற்றலே.

(இ-ள்.) எப்போதும் இளமை சிறந்தவனே, சிரேஷ்டமானவனே, அக்கினியே, தேஜஸோடுகூடி, ஹோமம் வளர்த்துக் கீர்த்தி வாய்ந்ததுதிகள் உன்னைப்புகழ நிற்பாயாக—(எ-று.)

3. சுற்ற மானவர்க் கிந்திடுஞ் சுற்றமொத்
துற்ற நண்பற் குதவுறு நண்பனைய்த்
தெற்றை றக்குஞ் சுதராகு மெமக்குச்சீர்
தூற்ற தக்கைதீ தோய்க்க லபீட்டமே.

(இ ள்.) சிறப்புப்பொருந்திய (அக்கினியே!) பந்துக்களுக்கு எப்போதுமுதவும் பந்துவைப்போலவும், மற்றொரு நண்பனுக்கு என்றுமாறாத உதவி செய்யும் நண்பனைப் போலவும், எங்களுக்குப் பிதாஸ்தானத்திலுள்ள நீ உனக்குப் புத்திரஸ்தானமாகிய எங்களுக்கு எப்போதும் எங்களுடைய அபீஷ்டங்களை யளிப்பாயாக—(எ-று.)

4. வருணன் மித்திரன் வாய்க்கு மரியமான்,
றருணந் தன்னிற் றடிக்கும் பகைவரை
மரண மெய்த மடிப்பவ, ரெங்குசை
யரணமாய், மனுயாகத்தின், வைகலே.

(இ-ள்.) (அக்கினியே!) எம்மகத்துக்கு இம்சை செய்பவரைக் கொல்லும் ரிசாதஸர்களாகிய வருணன், மித்திரன், அர்யமா, இம்மூவரும் மநுப்பிரஜாபதியின் யாகத்தில் அமர்ந்ததுபோல எங்களது தருப்பையின் மேல் அமரட்டும்—(எ-று.) மநுஷ: எனப்பன்மையிலுள்ளது. இது ஒருமைப்பன்மை மயக்கமாகக் கொள்வார் சாயணர். 'யரணமாக, மனிதரின், வைகலே,! மனிதரைப்போல அமரட்டும் என்று மொழிபெயர்ப்பார் மேனாட்டாசிரியர். அர்யமா, ஆதித்யர்களில் ஒருவன்; காலை மாலை ஸந்திகளுக்கு அதிதேவதை. மித்திரா வருணர்களோடு சேர்த்துக் கருதப்படுபவன்.

# அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

5. பண் டெமக்குமுன் ேறான்றிய தூதனே
மண்டு மிம்மகக் கண்ணெம தோழமை
யண்டி யுள்ளக் களியினி லாருக;
கொண்ட விவ்வெம கீதஞ் செவிக்கொளல்.

(இ-ள்.) பண்டைக்காலத்தில், எங்களுக்கு முன் உற்பவித்தவனே, ஹோமத்தை நடத்துபவனே! (அக்கினியே) நாங்கள் செய்யும் யக்ஞத்தில் எங்களுக்கநுக்கிரகிக்கும் தோழமைகொண்டு சந்தோஷிப்பாயாக. எங்களால் உபயோகிக்கப்படும் இத்துதிப் பாட்டுக்களைக் கேட்பாயாக—(எ-று.) தூதன், ஹோதா, ஹோமநிஷ்பாதகன்.

## வருக்கம் 20.

6. ஒவ்வு நித்திய மாக வித்தாரமா
யெவ்வெத் தேவரை யெப்பொழு தேத்தினு
மவ்வக் கால மெலா முனிடத்தினே
யிவ்வவி னவி யாவுதி யேயுமே.

(இ-ள்.) சாசுவதமாகவும் விஸ்தாரமாகவும், (வருணன், இந்திரன் முதலிய) நானாவிதமான தேவர்களை எந்தெந்தக்காலத்திலேத்தினாலும், அப்பொழுதெல்லாம் அவர்களுக் களிக்கப்படும் அவியை உன்னிடத்திலே ஆஹுதி செய்வோம். (அதனால் தேவதாந்தர விஷய யாகங்களிலும் நீயே ஸேவிக்கப்படுகிறாய்.)—(எ-று.)

7. மன்பதைக்குப் பதி, மகத் தூதுவ,
னின்ப மெய்திச் சிரேட்ட மியைந்தவ,
னன்பனா யெமக்கிங் குறல்; யாங்களு
மன்ப ராருக நல்லெரி யோம்பியே.

(இ-ள்.) பிரஜைகளை வளர்ப்பவனும், எக்கியத்தை நடத்துவோனும், இன்பமடைந்தவனும், வரேண்யனுமான (அக்கினி) எங்களுக்கு அன்பனாகவிருக்கட்டும். யாங்களு நல்ல அக்கினிகளை வளர்த்து அவனுக்கு அன்பர்களாகவிருக்கட்டும்—(எ-று.)

8. நற்சுடர்களினோ டொளிர்தேவர்க
ளற்சிறப் பவி நாடித் தரித்தவி
னற்சுடர்களினோ டிவணுங்களு
நற்சுட ருனை நாடி யிரப்பமே.

(இ-ள்.) சோபந அக்கினியோடு கூடிய தேவர்கள் சிறப்பு வாய்ந்த அவியைத்தாங்குகிற காரணத்தால், சுடர்கள் விளங்கும் அக்கினியோடு கூடிய யாங்களும் (அக்கினி!) உன்னை யாசிப்போம்—(எ-று.) தேவர்கள் என்னும் பதத்திற்கு இருத்துவிக்குக்கள் என்று பொருள் கூறியுள்ளார் சாயணர்.

9. அமரத் தன்மை யடைந்து சிறந்தவை,
வைமருங் கன்ம வெந்தர மாற்றிடு
மமரத் தன்மை யடைந்திவர் துதி
சமமதா நம்மிருவருக்கும் முறல்;

(இ-ள்.) மரண ரஹிதமான (அக்கினியே!) கர்மாநுஷ்டாநாநந்தரம், மர்த்தியர்களாகிய யாங்கள் சொல்லும் ஸ்தோத்திரங்கள் நம்மிருவருக்கும் பொது தர்மத்தோடு கூடியிருக்கட்டும்!—(எ-று.) இவ்வெக்கியம் நன்றாய நுஷ்டிக்கப்படட்டுமென்று யஜமானன் விஷயத்திலும், நன்றாயநுக்கிரகிக்கட்டும் என்று அக்கினி விஷயத்திலும் செல்லட்டும் என்பது தோன்ற இருவருக்கும் சமமதாவுறலென்றார்—சாயணர்.

10. மங்குறுத வலியின் மகனெனு
மங்கி யெல்லா வெரியொடு மிம்மகந்
தங்கி யெந்துதிச் சேவையை யேற்றிவ
ணங்க மாக வனத்தை யளிக்கவே.

(இ-ள்.) பலத்தின்புத்திரனே! அக்கினீ! எல்லா எரிகளோடும் இந்த யக்ஞத்தினிடத்திற்றங்கி எங்களது ஸ்தோத்திரங்களால் ஸேவிக்கப்பட்டு, எங்களுக்கு அன்னத்தையளிப்பாயாக—(எ-று.)

வருக்கம் 21.

## 27. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 4.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன்; வடமொழிச்சந்தம்: 1-12, காயத்திரி, 13 திருஷ்டுப்; தேவதை 1-12, அக்கினி, 13, விசுவதேவர்கள்.

1. மட்டில் பன்மக மாண்டவற்றிற்கெலா
மிட்ட மான விறைவனு யோங்கி யே
நெட்டை வாற்பரி நேரு மங்கியுனை
யொட்டி நற்றுதி கொண்டு வந்திப்பெனே.

(இ-ள்.) யாகங்களுக்கெல்லாம் இறைமை (தலைமை) வகிக்கும் அக்கினியும், நீண்டவாலோடுகூடிய குதிரையைப்போன்றவனுமாகிய வுன்னை ஸ்துதிகளால்வணங்குவோம்—(எ-று.) குதிரைதன் வாலால் எப்படித் தன்னை இம்சிக்கும் கொசுகு ஈ முதலியவற்றை யோட்டுகிறதோ அம்மாதிரியாக நீயும் உனது சுவாலையால் எங்களுடைய விரோதிகளைக் கண்டிக்கிறாய் எனத்தொழிலுவமையாயிற்று.

## மண்டலம் 1. சூக்தம் 26.

2. நீண்ட காலடிச் சத்துவச் சூனுவா
மாண்டவ னெஞ்சுகத்தை யளித்திட
வீண் டெமக் கெமதிச்சைக ளோர்ந்தபின்
வேண்டுமாறு விழைந்து சொரிகவே.

(இ-ள்.) விசாலமான காலடியுள்ளவனும், பலத்தின் புத்திரனுமான வன் எமக்குச்சுகத்தைத்தரட்டும். எம்மால்விரும்பப்பட்டவைகளையும் வருஷிப்பவனாகட்டும்—(எ-று.)

3. நடை பரந்தவ தூரத் தருகினி
னிடை பரந்திங் கனிட்டச் செயல்புரிந்
திடையு மர்த்திய ரெங்கள் பகைவரைத்
தடை புரிந்தெமைக் காத்திட லென்றுமே.

(இ-ள்.) வியாபிக்கு நடையோடு கூடியவனே! நீ, தூரத்தினின் றும் அருகினின்றும் வந்து பாபகாரியங்களைப் புரியும் எங்களது விரோதி களாகிய மர்த்தியர் (மனிதர்) எங்களையணுகவொட்டாதபடி தடுத்து எங் களை ஸர்வகாலமும் பாலிப்பாயாக–(எ-று.) விச்வாயு:, யாருக்கு எல்லாவிடத் துஞ் செனமுண்டோ அவன், இதனையே நடபரந்தவனென்றார்.

4. தேவர்க் கங்கி சிறந்த வவியிதை
யாவ லோடு புதிதின் வகுத்தவிப்
பாவு கீர்த்தி பகரு மறையினை,
மேவுமா றவர்க் கன்பின் விளம்பலே.

(இ-ள்.) அக்கினியே! (எங்களால் முன்பநுஷ்டிக்கப்பட்டதாயி னும்) தேவர்க்கென்று சிறந்தோங்கிய அவிக்கொடையையும், நூதனமாகச் செய்யப்பட்ட அதிரூபமான மந்திரத்தையும் பற்றித் தேவர்களுடைய முன் னிலையில் நன்றாயெடுத்துச்சொல்லுவாயாக—(எ-று.)

5. உத்தமத்து வானோங்கிய வுண்டியின்
மத்திமத் தல மார்ந்த வளத்தினி
னித்தரையி னியன்ற செல்வத்தினி
னெத்தெமக் கெவ்விடத்தும் பங் கீகவே.

(இ-ள்.) விண்ணில் வளரும் உத்கிருஷ்டமான அன்னப்பொரு ளில் எங்களுக்குப் பங்களிப்பாயாக. மத்திமத்தலமாகிய வந்தரத்தில் வளரும் உணவுப்பொருள்களிலும் எமக்குப் பங்களிப்பாயாக. அந்திமத்தலமான பூமி யிலுண்டாகுஞ்செல்வத்திலும் எங்களுக்குப் பங்களிப்பாயாக—(எ-று.)

வருக்கம் 22.

# அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

6. சித்திரக் கிரணத் திகழ் காந்தியோய்!
நத்து சிந்து நயந்திய வூர்மியை
யொத்த நின்கொடை பங்கிட் டெக்கையி
னத்தி யெக்கிய ரூடிக் களிக்கையே

(இ-ள்.) சித்திரபானுவாகிய அக்கினியே! சிந்து (ஆறு) வானது அலையாக (வாய்க்கால்களாக)ப்பிரிந்து தன் கூனிறைந்த நீரைப்பங்கிடுவது போல உனது கொடைகளைப்பங்கிடுகையில், யாகஞ்செய்வோனுக்கு அவனது கர்மபலன்களையளிக்கிறாய்—(எ-று.) ஊர்மி அலை, யீண்டு கிளைக்கால் வாய்களைக் குறித்து நின்றது. களிதல்—இளச்சிசொல்லுதல் ஈண்டு கர்மபலன்களையளித்தல்.

7. போரில் யாரை யுவந்து புரக்கிறாய்,
தூரின் யாரினைச் சண்டைக்குத் தூண்டுவா,
யேரி னக்கினி யம்மக னென்றைக்குந்
தீருறு வனஞ் சிறந் தோங்குவான்.

(இ-ள்.) அக்கினியே! யுத்தத்தில் உன்னால் காப்பாற்றப்படுபவனும், சண்டைக்குத் தூண்டிவிடப்படுபவனுமாகிய மர்த்தியன் எப்பொழுதும் வற்றாத வுணவுப்பொருள்களோடு விளங்குவான்—(எ-று.) இஷ: அன்னமென்பார் சாயணர்; வலியென்பார் மேனாட்டாசிரியர். அதனால் தீருறுதவலி சிறந்தோங்குவான். என்பதும் பாடம்.

8. மாற்றலரை யடக்கும் வலியுளோய்
போற்று மன்பனைப் போரினில் வெல்பவன்
சாற்றுதற் கிங் கிலை நனிகீர்த்தியா
யூற்ற மொய்ம் பிவ னன்னவற் கோங்குமே.

(இ-ள்.) சத்ருக்களையடக்கும் வலியுள்ளவக்கினியே! உன்னுடைய பக்தனது வல்லமையைக் கடக்கும் சக்தியெவனுக்குமில்லை. மேலும் அவ் யஜமானனுக்குப் புகழ் நிறைந்த வலிமை விசேஷங்களுமுண்டு.—(எ-று.

9. எல்லவர்த மிடத்து மியைபவன்
செல்லும் போரிற் றிடம்பெற வெங்களை
வெல்லும் போர்ப்பரி மீது கடப்பித்தே
யொல்லும் விப்பிர ரோடு பலன்றரல்.

(இ-ள்.) எல்லா மனிதர்களோடுங் கூடியவனான (அக்கினி,) யுத்தத்திற் குதிரைகளினுதவியைக்கொண்டு (போர்க்களத்தைக்) கடந்து செல்லுமாறு செய்க, (இருத்துவிக்குக்களான) விப்பிரர்களோடு களிக்கும் அக்கினி எங்களுக்கு யாகபலனையளிக்கட்டும்—(எ-று.)

## மண்டலம் 1. சூக்தம் 27.

10. போற்றுணர்ந்தவ வீடுதொறும் புகுந்
தாற்றும் யாக மநுக்கிரகத்துறப்
போற்றுவாய்; யஜமான னுருத்திரற்
காற்றுங், கண்ணுறத் தக்கநற் றேமமே.

(இ-ள்.) போற்றியுணரப்படுபவனே! (அக்கினியே!) வீடுகள் தோறும் நடக்கும் யாகங்களையனுக்கிரகிக்குமாறு வீடுவீடாய்ப்புகுவாயாக. யஜமானனும் உருத்திரனுகிய வனக்காக அழகிய ஸ்தோமங்களைப்பாடாநின்றான்—(எ-று.)

வருக்கம் 23.

11. தன்மை யோங்கு மகான் பரிச்சின்னமே
தன்னமும் பெருந் தூமக் கொடியினன்
மன்னு சோதி வளர்ந்து பெருத்தவ
னன்ன மெங்களுக் கேய மகிழ்கவே.

(இ-ள்.) குணஞ்சிறந்த மகானும், அபரிச்சின்னனும், புகைக்கொடியையுடையவனும் (புகையினலறியப்படுபவனும்,) மிகுந்த காந்தி யுடையவனுமாகிய அவன் (அக்கினி) எங்களுக்கு அன்னம் (அல்லது பலம்) பொருந்துமாறு ஸந்தோஷப்படட்டும்—(எ-று.)

12. தெய்வ மக்களைப் பாலிக்கு மக்கினி,
தெய்வ ஞாபக மூட்டும் பதாகை, தன்
செய்ய காந்தி பெருத்தவன், செல்வனின்,
றுய்ய வெந்துதி தன்செவி தோய்க்கவே.

(இ-ள்.) தேவ சம்பந்தமுள்ளவனும், பிரஜைகளைப் பாலிப்பவனும், தேவஞாபகத்தை மூட்டுங் கொடியும், பிரகாசமிகுந்தவனுமான அக்கினி, செல்வவான் (வந்தியரின் துதியைக்கேட்பது) போல எங்களது உததிகளைக் கேட்கட்டும்—(எ-று.)

(வேறு.)

13. பெருவலித் தேவர்போற்றி; பிறங்கு சிற்றிறைவர் போற்றி;
தருணநல் லிளைஞர் போற்றி; தக்க மூத்தவர்கள் போற்றி;
யுரிய போற்றிழைப்பாஞ் சத்தி யுள்ளவவ் வரையுந், தேவ
ரரிய விவ்வெமது போற்றை யன்றி யங்கீகரிக்கல்.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

(இ-ள்) (அக்கினியினாற் பிரேரேபிக்கப்பட்ட சுநச்சேபன் விச்வ தேவர்களைத்துதிக்கிறான்.) மகத்தாகிய (குணமும்) வலியுமுள்ளதேவர்களுக்கு நமஸ்காரம்; (குணக்குறைவுள்ள) சிறுதேவர்களுக்கு நமஸ்காரம்; வயதிற் சிறியவர்களுக்கு நமஸ்காரம்; வயதின் மூத்தவர்களுக்கு நமஸ்காரம்; சக்தியுள்ளவரையில் தேவர்களைஸ்தோத்திரஞ் செய்து வணங்குவோமாக; தேவர்கள் எங்களது இந்தஸ்தோத்திரத்தைக் காட்டிலுஞ் சிரேட்டமான வேறு ஸ்துதிகளை யெப்பொழுதும் அங்கீகரிக்காமலிருக்கட்டும்—(எ-று.) தேவரீண்டு விச்வ தேவர்களாம்.

வருக்கம் 24.

## 28. மண்டலம் 1 அநுவாகம் 6 சூக்தம் 5.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன்; வடமொழிச்சந்தம்: 1-6 அநுஷ்டுப், 7-9 காயத்திரி; தேவதை: 1-4 இந்திரன்; 5, 6, உரலபிமானிதேவதை, 7, 8, உரலுக்கும் உலக்கைக்குமுரியதேவதை: 9, பிரஜாபதியாகிய அரிச்சந்திரன்; அதிஷவணசர்மதேவதை யென்றுஞ் சொல்லலாம்.

(வேறு.)

1. தோய்ந்த பேரடி விசாலமாத் தோய்ந்த கல்லதனை,
யாய்ந்த சோமத்தை நசுக்க வென் றுயர்த்திய விடத்தி
னேய்ந்து தாகமோ டிந்திர வெழில்பெறு முரலின்
வாய்ந்து கீழ்விழுஞ் சுதையினை வளமுறப் பருகல்.

(இ-ள்.) இந்திரனே! எந்தயக்ஞத்தில், எல்லாக்கருமங்களிலும் அபிஷவணஞ்செய்யும் பொருட்டுக்கல்லானது விசாலமான அடியோடு உன்னதமாகத்தூக்கிப் பிடிக்கப்பட்டுள்ளதோ அந்தக்கர்மத்தில் உரலினின்றுந்தானே வழிந்து கீழொழுகுஞ்சோமத்துளிகளைக் குடிப்பாயாக—(எ-று.)

2. தோய்ந்த தட்டுக ளிரண்டு சாறேந்துதற் கென்று
வாய்ந்த நற்சகனத்தினின் வைத்த வவ்விடத்தி
னேய்ந்து தாகமோ டிந்திர வெழில்பெறு முரலின்
வாய்ந்து கீழ்விழுஞ் சுதையினை வளமுறப் பருகல்.

(இ-ள்.) இந்திரனே! எந்தயக்ஞத்தில் தட்டுகள் சாற்றை யேந்துவதற்காகச் சகனம் (இடுப்புமூட்டு) போல வைக்கப்பட்டுள்ளனவோ அந்தக் கர்மத்தில் உரலினின்றுந்தானே வழிந்து கீழொழுகுஞ்சோமத்துளிகளைக் குடிப்பாயாக,—(எ-று.)

## மண்டலம் 1. சூக்தம் 28.

3. ஏய்ந்து சாலையி னுட்புகல் வெளிவர விவற்றை
யாய்ந்த டிக்கடி நாரியும் பழகு மவ்விடத்தி
னேய்ந்து தாகமோ டிந்திர வெழில்பெறு முரலின்
வாய்ந்து கீழ்விழுஞ் சுதையினை வளமுறப் பருகல்.

(இ-ள்.) இந்திரனே! எங்கே யாகபத்தினி உலக்கை கீழும் மேலு மாகச் செல்லும் முறையைக் கவனித்துச் சிக்ஷை கற்றுக் கொள்கிறாளோ அங்கே உரலினின்றும் விழுந்து கீழொழுகுஞ் சோமத்துளிகளைக் குடிப்பாயாக—(எ-று.) இது, மேனாட்டாசிரியர் மதப்படி 'ஏய்ந்துலக்கை மேலெழுந்து கீழ் விழுவதையெண்ணி' யென்றிருந்தல் வேண்டும். அடுத்தபாட்டிற் கயிற்றை கட்டியிழுக்கும் முறை வெளிப்படுவதால் அதனை யிழுப்பவள் யாகபத்தினியாயிருக்கவேண்டுமென்று ஊகிக்க விடமுண்டு. சாலையாகசாலை.

4. பாய்ந்து செல்லுறும் பரியினைக் கலினத்தாற் பிணிப்ப
தேய்ந்து மத்தினைக் கயிற்றினாற் பிணிக்கு மவ்விடத்தி
னேய்ந்து தாகமோ டிந்திர வெழில்பெறு முரலின்
வாய்ந்து கீழ்விழுஞ் சுதையினை வளமுறப் பருகல்.

(இ-ள்.) குதிரைக்குக் கடிவாளம் பூட்டுவது போல மத்துக்குக் கயிற்றைச்சுற்று மவ்விடத்தினுரலினின்றும் வழிந்து கீழொழுகுஞ் சோமத்துளிகளைக் குடிப்பாயாக—(எ-று.) முதலேய்ந்து, உவமைப்பொருளில்வந்தது.

வருக்கம் 25.

5. கலுவமே யுனை யிற்றொறும் பணிக்கென வமைத்து
நிலவ விட்டன ரென்பது நிசமெனி னீயிங்
குலவு ஆல்லிய வுன்னொலி வுவப்பினிற் றருவாய்
சுலவு வெற்றியோர் முரசொலித் தொனியினைப் போன்றே.

(இ-ள்.) உரலே உன்னை (யாக) வீடெடோறும் வேலைக்காக அமைத்து வைத்திருப்பது நிசமானால், வெற்றிகொள்ளுவோரது துந்துபி வாத்தியம் சப்திக்கும் ஓசையைப் போன்ற அவ்வளவு உரத்த குரலோடும் சப்திப்பாயாக—(எ-று.) கலுவம் ஈண்டு உரல்: உரலபிமானி தேவதையைக் குறிக்கும்.

6. வனத்தி னற்பதிக் கலுவமே வாயுவு முனது
முனத்தின் மந்தமாய் வீசுறும் போதினி னீயும்
வனப்பி னிந்திரன் வளமுறப் பருகுவான் சோமங்
கனத்த பாரத்தி னசுக்கியே பிழிந் தளித்திடலே.

(இ-ள்.) வனபதியாகிய (விருட்சத்தினாலான) உரலே! உன் முன்பு வாயு மந்தமாய் வீசும்போது, நீயும் இந்திரன் குடிக்கும் வண்ணம், ஸோமத்தைப் பிழிந்து தருவாயாக—(எ-று.)

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

7. அன்னு நல்லனத் தோ முத்தமரென
மன்னு மெய்திய சாதனங்காள், விரை
யுன்னி மெல்லும் பரியிரண் டொத்துநீ
ருன்னதத் துணைவோங்க வுலாவுவீர்.

(இ-ள்.) அன்னப் பொருள்களை யெல்லாங் கூட்டிவைக்கும் உத்தமர்களென்னும்படியான யஞ்ஞ சாதனங்களே! (உரலுலக்கைகளே!) ஆகாரத்தைச் சப்தத்தோடு மெல்லும் (இந்திரனுடைய) குதிரைகளைப்போல, உணவுப்பொருள்கள் மிகவுஞ்சிறந்தோங்கும்படி உலாவுவீர்களாக—(எ-று.)

8. வனப் பதிகாள்! மருவு மிக் கன்மத்தே
வனப்பொழுகுங் கருவிக டம்மொடு
வனப் படைந் திருமக்காகு மதுச்சுவை
யினிப்பி னீருவி ரிந்திர னுர்கவே.

(இ-ள்.) வனஸ்பதிகளே (மரத்தாலான உரலுலக்கைகளே!) இக் கருமத்தினிடத்தில் அழகு வாய்ந்த (சோமம் பிழியும்) கருவிகளோடு அழகெய்தியவர்களாய், இந்திரபானார்த்தம், மதுரியமான ஸோமரஸத்தை எங்களுக்காகப் பிழிந்து கொடுப்பீர்களாக—(எ-று.)

9. அபிடவஞ் செய் தகைந்த மிகுதியைத்
தடவுளூறது வள்ளத்தினிற் றருக;
வுபரி சோமத்தைத் தூய்மை யுறுத்துக;
விடமை மண்டி யதந்தோலின் விரிக்கவே.

(இ-ள்.) (இருத்துவிக்கு யஜமானனுகிய அரிச்சந்திரனே!) அபிஷவஞ்செய்து மிச்சமான சோமத்தை (மூக்கு) வள்ளத்திலேந்துக; மிகுந்த ஸோமத்தைப் பரிசுத்தமாகும் வண்ணம் வடிகட்டிஊற்றுக; சக்கையைப் பசுத்தோலின் மேல் விரிக்க—(எ-று.) அபிஷவஞ்செய்தல் அக்கினியில் ஆவுதியாகப்பெய்தல்.

வருக்கம் 26.

## 29. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 6.

### 7. இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுனச்சேபன்; வடமொழிச்சந்தம்: பங்க்தி (தமிழில் அறுசீர்க் கழி நெடிலாசிரிய விருத்தம், ஓரடிமேல் வைப்பு.) தேவதை: இந்திரன்.

## மண்டலம் 1 சூக்தம் 104.

2. அந்நரருதவிக்காகவிந்திரனிடத்தணைந்தார்;
அன்னவர் நெறிக்கணன்னனடைகவல்விரைவிற்றேவர்,
துன்னியதாசன்கோபந்துடைக்க;வெந்தமக்கென்றன்னார்
மன்னியவனிட்டமாற்றுமவனையெக்கியத்தேயெய்க்க.

(இ-ள்.) யாக நடத்தும் அவ் யஜமானர்கள் உதவிவேண்டி யிந்திரனைச் சேர்கின்றார். அவ்விந்திரனும் விரைவில் அவர்களுடைய அநுஷ்டான மார்க்கத்தை யடையட்டும். தேவர்கள் எல்லாரும் எதிர்த்து யுத்தத்திற்கு வரும் தாஸனுடைய கோபத்தையழிக்கட்டும். எங்களுக்கென்று அத்தேவர்கள் அநிஷ்ட நிவாரணகர்த்தாவாகிய அவ்விந்திரனை யக்ஞத்திற்குக் கூட்டிக்கொண்டு வரட்டும்—(எ-று.)

3. பிறர் தனம்பெரிது மோர்ந்த குயவன்கைக் கொள்வான் றானே;
யறன ன்ந்தலை யுறைந்தவ் வறலினைப் பேனத்தோடு
முறையிலா தபகரிப்பான்; முழுகுவர் பாலினன்றான்
பிரியைகள்; அவர் களாழம் பிறங்கிய சிபையின் மூழ்க.

(இ-ள்.) பிறருடைய தனத்தை நன்கறிந்த குயவனென்னு மசுரன் அத்தனங்களைத் தானே கைக்கொள்வான். தண்ணீருக் குள் வசித்து அத்தண்ணீரையவன் நுரையோடும் அபகரித்துக்கொள்ளுவான். அவனது பத்தினிகளிருவரும் அவ் வளநிறைந்த (பாலில்) மழை நீரில் ஸ்நானஞ்செய்வார்கள். இப்படி அநியாயஞ்செய்யும் குயவனும் அவன்மனைவியருமாகிய விவர்கள் ஆழமிகுந்த சிபையென்னும் ஆற்றில் மூழ்கியிறக்கட்டும்—(எ-று.) குயவன் மேல் மண். 1 சூக். 103 செய். 8ல் கூறப்பட்டவன். ஓரசுரன் என்பார் சாயணர். ஆரியரோடு யுத்தஞ் செய்த ஒரு அநாரியவரசனது பெயராயிருக்கலாம் என்பார் மேனாட்டாசிரியர் (Griffith). பேனமுறையுறல் என்றது மழைநீரைக்குறிக்குமென்பார் (Benfey) பென்வேயென்பவர். 'தனக்கில்லாத பொருளை யடைய விரும்பும் ஆரியனுக்குத்தனது சௌசங்களுக்கு வேண்டிய தண்ணீர் கிடையாதபோது பகைவனது மனைவியர் தமது செல்வச்செருக்கைத் தோற்றுவிக்கப் பாலிற் குளிக்கிறார்கள்'. என்பது கருத்தென்பார் லுட்விக் என்பவர். பால், வளநிறைந்த மழைநீரைக் குறிக்கும். மண். 1 சூக். 64 செய் 5 பார்க்க. சிபா, சிபை, ஓர் நதியின் பெயரென்பார் சாயணர்.

4. நீர்நடுவுறைந்துசேர்ந்தோனிலயமுந்தெரியாதோங்கும்;
பூர்த்தியினணைந்தநீர்க்கட்பூரித்துச்சூரனுள்வான்;
ஆர்ந்தநீர்வீரபன்னிகுலிசியுமஞ்சஸீயுஞ்
சார்தருமுவப்பைப்பூட்டித்தாங்கும்பாறந்நீர்க்கண்ணே.

(இ-ள்.) தண்ணீருக்கு மத்தியிலுறைந்து சேர்ந்தவனாகிய குயவவனென்னுமசுரனுடைய காவல் பொருந்திய இடம் ஒருவருக்குந் தெரியாது கிடந்தது. பூர்த்தியாயுள்ள நீரில் அச்சூரனாகிய குயவன் வளர்ந்து அரசாளுகிறான் (அல்லது தனது சௌரியத்தினால் உலகப்பிரசித்தியையெய்துகிறான்.) வீரபத்நி (ஸரஸ்வதிபோலும்) அஞ்சஸீ, குலிசி என்னும் மூன்றுஆறுகளும் அவனுக்கு ஸந்தோஷத்தை யளித்துத்தமது நீரிற் பாலொழுகும் பெருமையைத்தாங்கும்—(எ-று.) நாபி யென்னும் வடமொழிப் பதத்துக்கு ஸங்கத்த மாவஸஸ்தானமென்பார் சாயணர். காவலிடமென்றார் உரையில். சூரன் ஈண்டு குயவனைக்குறித்தது. குயவன் மேல் 3ம் செய்யுளில் நோக்குக. வீரபத்நி ஸரஸ்வதி நதியைக்குறிக்குமென்றது மேல், மண். 6 சூக். 49

# அஷ்டகம் 1. அத்தியாயம் 7.

செய். 6ல் அச்சொல் ஸரஸ்வதியின் அடையாக வருவதால். அஞ்சலி நேராக அல்லது விரைவாக ஓடுவது என்பது பொருள். குலிசி குலத்தை விருத்திக்குக்கொண்டுவருவது. இம்மூன்றும் நதிப்பெயர்களாம். அவை குயவனது பெருமையைத் தோற்றுவிப்பன. பால் ஸாரம் பொதிந்த நீர்.

5. தாசன் றன் சுவடுகண்ட தக்கண மவனில்லத்தை
யாசிறுத் தொழுவ மெய்துங் கணக்கென வடைந்தான்; பின்னர்ப்
பேசுறு மகவானே யெந் துன்பினைப்பேர்ப்பாய்; வேசை
நேசனு நிதியை வீசு நிலைமையி னெமைத் தள்ளற்க.

(இ-ள்.) அத்தஸ்யுவாகிய குயவனுடைய அடிச்சுவடுகள் காணப்பட்ட மார்க்கத்தைக் கண்டதும், கன்றுள்ள கொட்டிலை யறிந்த பசு நேராக அக்கொட்டிலுக்குப் போவதுபோல் அவனது வீட்டிற்குச் சென்றான். பிற்பாடு, இந்திரனே, அவனால் நேரும் எங்கள் கஷ்டத்தை நீக்குவாயாக. வேசிகாந்தன் பணத்தை வாரி வீசுவதுபோல எம்மைப்புறம்பாகத்தள்ளிவிடற்க-(எ-று.) இந்திரன் அடைந்தானெனக்கொள்ளல் வேண்டும். படர்க்கை முன்னிலையாகமாறியது.

வருக்கம். 18.

6. அன்ன விந்திரா நீ யெங்கட் காதவ னொளியி, னீரிற்,
றன்னமும் பாவமில்லாத் தன்மையிற், சீவப் பேற்றின்,
மன்னுறப் பங்கமைக்க; வெளிவராச் சந்தானத்தைப்
பின்னமே யுறுத்திடாயுன் பெருமுரா ணம்பினோமே.

(இ-ள்.) அத்தகைய விந்திரனே! நீ எங்களுக்குரிய வெளிச்சத்திலும், தண்ணீரிலும், பாவமின்மையிலும், கீர்த்தியிலும் பங்கு தருவாயாக. இன்னும் பிறக்காதிருக்கு எமது புத்திரர்களைக் கெடுத்துவிடற்க. உனது பெரிய ஐந்திர வலிமையை நம்பியுள்ளோம்—(எ-று.) ஸாயணர் சீவப்பேறுகியபாவமில்லாத தன்மையிற் பங்களிக்கவெனக் கூட்டுவர். ஆனால்மேனாட்டாசிரியர் அவற்றை உம்மைத்தொகையாகக் கொள்வர். சீவப்பேறு, கீர்த்தி. 'தோன்றிற் புகழொடு தோன்றுக' வென்றார் பிறரும். உன்பெருமுராணென்றது ஐந்திர வலிமையை.

7. உணர்ந்தனென்; யாங்களுன் மாட்டன்புறு துதியிழைத்தோம்;
புணர்ந்திடு பெருந் தனத்திற் பொருத்துக, மகானே, வள்ளால்!
தணந்திடுநிதி யில்லத்திற் றயக்கிட லெமைப்; பசிக்குக்
கொணர்ந்திடு மன்னபானங் கூட்டுக, புருகூதன்னே!

(இ-ள்.) (இந்திரனே!) உன் மனதை யறிந்து கொண்டேன். உன் பலத்தைத் தோற்றுவிக்கும் புகழ் வசனங்கள் எங்களால் ஆசையோடுஞ் செய்யப்பட்டன. மகானே! இச்சையை யளிப்பவனே! எங்களை மிகுந்த செல்வத்தில் வைப்பாயாக. செல்வம் குறைந்து கொண்டுவரும் வீட்டில் எங்களை வைக்காதொழிக. புருஹூதனே! பசிக்கு அன்னபானாதிகளை எங்களுக்குத் தருக—(எ-று.) நிதி தணந்திடு மில்லமென்க.

8. வதைக்கவிந்திரவெந்தம்மைக்; கைவிடலெம்மை; வாழ்வைப்
புதைக்கலெம்போனகத்தைப்; பொருளுளோய், சத்திமா, னெ
முதித்திடாச் சந்தானத்தையொழித்திடல்; ஆதானத்தே
மதித்துறும்பாத்திரங்கடம்மையுமுடைத்திடாயே.

## மண்டலம் 1. சூக்தம் 105.

(இ-ள்.) இந்திரனே! எங்களைக் கொல்லாதொழிக. எம்மைக்கைவி டற்க; எமது வாழ்வையும் போஜன வஸ்துக்களையு மில்லாமற்செய்யற்க. மகவானே! சக்கிரனே! கர்ப்பத்திலுள்ள எங்களுடைய சிசுக்களை யழித்து விடாதே. அக்கினி யாதானத்தினுள்ள ஸ்ருவம் முதலிய பாத்திர உபகரணங்களை உடைத்துவிடற்க—(எ-று.) இனித் தோன்ற நிற்கும் ஸந்தானங்களைத் தரிக்கும் பாத்திரங்களாகிய மாதரைச் சிதைக்காதொழிக வென்று மேனாட்டாசிரியர் பொருள்கூறுவார். அற்றேல் 'அவரைத்தாங்கு, மதிப்புறு பாத்திரங்கள் மரித்திடா தாற்றுவாயே.' எனப் படபேதமாகக் கொள்க.

9. வருகவெம்மாட்டுச்;சோமமகிழ்பவனென்றுருன்னை;
மருவுமிச்சுதையைமத்தம்வளர்ந்திடப்பருகல்;உன்றன்
பெருமுறுப்பகட்டிற்பேசுமதனையேயூற்றல்;கூவிற்
சருவியெம்போற்றைக்கேட்க,தந்தையேயென்ன,மாதோ.

(இ-ள்.) எம்மிடத்து வருவாயாக. உன்னைச் சோமங்குடித்து மகிழ்பவனென்று பூர்வீகர்கள் சொன்னார்கள். இந்த ஸோமத்தை மதம்பெருகுமாறு குடிப்பாயாக. பெரிய அவயவத்தோடு கூடிய உனது விசாலமான வயிற்றில் இச்சோமத்தை யூற்றுவாயாக. யாங்கள் அழைக்கும்போது, எங்களருகேவந்து பிதா தன்புத்திரனது வார்த்தையைக்கேட்பது போலக் கேட்பாயாக—(எ-று.)

### வருக்கம் 19.

## 105. மண்டலம் 1. அநுவாகம் 15. சூக்தம் 12.

### 19 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஆப்த்யன் த்ரிதன் (குத்ஸன் என்றும் கொள்ளலா மென்பார் மேனாட்டாசிரியர். ஏன்? குத்ஸனும் த்ருதனும் இருவரும் கிணற்றில் விழுந்ததாகச்சொல்லப்படுவதால். த்ரிதன் நினைக்கக் குத்ஸன் அவன் நினைப்பையெடுத்தோதினான் என்பதும் ஒன்று.)

தைத்திரீய பிராஹ்மணத்தில் அபனுக்கு ஏகதன், துவிதன், திருதன் என்னும் 3 புத்திரர்கள் பிறந்தார்கள் என்று சொல்லப்படுகிறது. "ஒருநாள் இம்மூவரும் நீர் வேட்கையால் ஊரெங்குஞ் சுற்றி ஒரு கூபத்தைக்கண்டார்கள். அப்போது த்ருதன் கிணற்றுக்குள்ளிறங்கித் தான் நீரருந்திய பின்னர் மற்றைய ஸஹோதரர்களுக்குங் கொண்டுவந்து கொடுத்தான். அவர்கள் அந் நீரையருந்திவிட்டு அவனைக் கிணற்றிலேயே போட்டு மூடிவிட்டு அவன் சொத்தை யெடுத்துக்கொண்டு விட்டார்கள். பிறகு இரவிற் சந்திரனது கிரணம் கிணற்றில் விழுந்ததைக்கண்டு குறைகூறித் தூக்கித்தான்.' என்பது சாட்யாயன கதை. அபன் ஒரு ரிஷி.

வடமொழிச்சந்தம். பங்தி, 8 மகாப்ருஹதி யவமத்யா (இரண்டு காய்ச்சீர்வரும் அறுசீர்க்கழிநெடில் ஓரடி மேல் வைப்பு.), 19 த்ருஷ்டுப்.

தேவதை: விச்வதேவர்கள் (இது பொதுப்படக் கூறியது.) விவரித்துக் கூறின். 1 விச்வதேவர்கள், 2 ரோதஸீ, 3 விச்வதேவர்கள், 4 அக்கினி ரோதஸிக்கள், 5,6,7 விச்வ தேவர்கள், 8 இந்திரரோதஸிக்கள், 9 சூரிய கிரணமும் ரோதஸிக்களும், 10 விச்வதேவர்கள், 11 சூரிய கிரணமும் ரோத

# அஷ்டகம் 1. அத்தியாயம் 7.

விக்களும், 13,14 அக்கினியும் ரோதஸிக்களும், 15 வருணனும் ரோதஸிக்களும், 16,17 விச்வதேவர்கள். 18 ரோதஸிக்கள், 19 விச்வதேவர்களாம். இது முதல் மூன்று சூக்தங்கள் விச்வதேவர்களைக் குறித்துப் பாடியதாம்.

(நீவைறு.)

1. அந்தர வட்டத் தோடுமி மணிகதிர்ச் சிறகாலாருஞ்
சந்திர கிரணம் வானிற் றனியுற வுலவும் வல்லே;
சந்திர மயமா நேமி சார்கிர ணங்காள்! உந்தஞ்
சுந்தரப் பதத்தை யெங்கண் டோய்ந் தறியா மனின்று;
நந்துவான் புவிகா ளென்ற னிலைநீ ருணரற் பாற்றே.

(இ-ள்.) அந்தரிக்ஷத்தின் மத்தியிலோடும் சூரியனது கதிர்களால் நிறைந்த சந்திரனது கிரணங்கள் ஆகாசத்திற் றனியாகவேகமாகவுலாவும். பொன்மயமான சக்கரத்தைச் சார்ந்த கிரணங்களே! நீர் உற்பவிக்கும் அழகிய ஸ்தானத்தை யெங்களுது கண்கள் (கிணற்றில் விழுந்தகாரணத்தினால்) அறியவில்லை. பூமிவானங்களே! என்னைவிரும்பி என்னுடைய இந்தத் துக்கத்தை யுணர்ந்து எனது இந்த ஸ்தோத்திரத்தைக் கேட்டு, எங்களை இந்தக் கூபத்தினின் றெடுப்பீர்களாக—(எ-று.).கதிர்ச் சிறகு ஸூர்யரச்மிகள். சந்திரமயமாநேமி ஹிரண்மயநேமி பொன்மயமான சக்கரம். சுந்தரப்பத மென்றது அவையுற்பத்தியாகும் ஸ்தானத்தை. நான்காமடி மூலத்திலுள்ள படியே மொழிபெயர்த்தது. வித்தம்மே அஸ்யரோதஸீ யென்பதற்கு பூமிவானங்களே! என்னுடைய இது உங்களால் அறியத்தக்கது, என்பது சரியான பொருள். உரையிற்கூறிய விரிவெல்லாஞ் சாயணருரையிற் கண்டது.

2. ஆர்த்திசார்மாந்தர்வேண்டுமத்தத்தைப்பெறுவார்மெய்யே;
சீர்க்கணவன்றன்மாட்பிற்சேர்ந்தொழுகுவளில்லாளும்;
நீர்த்திருவரும்பிணைந்துநீசாரன்பின்மூழ்கி
யார்த்தபண்டியிற்சாரத்தையணைத்துநன்மகாரையீவார்;
கூர்த்தவான்புவிகாளென்றனிலைநீருணரற்பாற்றே.

(இ-ள்.) உண்மையாகவே தனகாமிகளாயுள்ள மாந்தர் தாங்கள் விரும்பிய செல்வத்தை யடைவார்கள் (எனக்குக் கிடைப்பதில்லை என்றபடி.) மனைவி தனது புருஷனைப் பின்பற்றி நடப்பாள். இருவரும் அன்போடு கூடி வீரியமாகிய ரஸத்தைக் கர்ப்பாதானஞ் செய்து சற்புத்திரனைப்பெறுவார்கள் (எனக்கு அத்தகைய புத்திரன் கிடைப்பது துர்லபம்என்றபடி) வானம் பூமிகளே என்னுடைய இத்துக்கம் உங்களாலறியத்தக்கது—(எ-று.) நீர்த்து, நீர்மை கொண்டு, நீர்மையோடொழுகி என்றபடி.பண்டி, வயிறு கருப்பாசயம்.

3. தேவர்காள்,வானத்தும்பர்சிறக்குமவ்வொளியென்றைக்குந்
தாவுமப்பதத்தினின்றுங்கீழுறாதமைக;சோம
மாவலிற்பருகுந்தன்மையடைந்தவெங்கட்குநன்மை
மேவுறவியற்றுமைந்தர்விஷாதத்தையுண்டுபண்ணல்;
தூவியவுரோதஸீயென்றுயாமீதுணரற்பாற்றே.

(இ-ள்.) தேவர்களே! விண்ணிற்கு மேற்சிறக்கு மந்தப்பிரகாசம் எப்பொழுதும் அப்பதத்தினின்றுங் கீழிறங்காத வண்ணமியையட்டும். ஸோமங் குடிக்கும் எங்களுக்கு, நன்மைபுரியும் புத்திரர்களது சோகத்தை யேற்படுத்

நாதீர்கள். பூமிவானங்களே! எனது இந்தத்துக்கத்தை யுணர்வீர்களாக-(எ-று) ஒளியென்றது மேனாட்டாசிரியர் உரைபற்றி யுரைத்தது. ஸாயணர் எங்கள்பிதா,பிதாமஹ, ப்ரபிதாமஹ ரூபமாயுள்ள ஸந்தானம் என்பார். மேனாட்டாசிரியர் ஒளியென்றது, பிதிர்க்கள்,நட்சத்திரங்களாக மாறுகிறார்களாதலினென்க. மேல் 9-ம் செய்யுளை நோக்குக. எங்களுக்குப் புத்திரரில்லாததால் எங்கள் பிதிர்க்கள் ஸ்தான ப்ரஷ்டர்களாகாமலிருக்கக்கடவது வென்பது கருத்து என்பார் ஸாயணர். ஐதரேயப் பிராஹ்மணத்தில் புத்திரர்களால் உலகங்களைப் பெறுகிறான் புத்திரனில்லாதவனுக்கு இவ்வுலகுமில்லை, என்று சொல்லப்படுகிறது. புத்ரேலோகாந் ஜயதி நாபுத்ராஸ்ய லோகோஸ்தி; விடாதம், விஷாதம்.

4. எக்கிபத்திாமையேய்ந்ததேவனை வினவுவல்யான்
முக்கிய தூதனன்றான்மொழிகவித்தாரமாக;
எக்கடைபோயிற்றுன்றனெறிலுறுபூர்வநேமம்?
இக்கணமதனைப்போற்று நூதனகாரியாவன்?
மிக்கசீருரோதவீயென்வேதனையுணரற்பாற்றே.

(இ-ள்.) யக்ஞத்தினிடத்து முற்பட்ட (இளமை வாய்ந்த)தேவனை அக்கினியை யான் கேட்பேன். தேவர்களது முக்கிய தூதனாகிய அவன் விஸ்தாரமாக எனக்குப் பதிற்சொல்லட்டும். (அக்கினியே!) பூர்வகாலத்திலிருந்துவரும் உனது நியமங்கள் எங்கே போயின? இப்போது அவற்றைச் செய்யும் புதியவன் யார்? வானம், பூமிகளே! எனது துன்பத்தை யுணர்வீர்களாக-(எ-று.) அக்நிர் தேவாநாமவமம் 'என்பது தைத்திரீயப்பிராஹ்மணம். எக்கியச்சிறுமையேய்ந்ததேவனைஎன்றுங்கூறலாம்.

5. தேவர்காள்,முத்தானத்துஞ்செம்மையினுழுகீர்; அன்ன,
பாவுமென்றாழின்சோதிபரந்ததால்விளங்காநிற்கும்;
மேவியவெமதுபோற்றினுண்மைபொய்ம்மைகளுமெங்கே?
தாவில்சீர்ப்பழமையாகயான்றருமகந்தானெங்கே?
தூவியலுரோதவீயென்றுயரமீதுணரற்பாற்றே.

(இ-ள்.) தேவர்களே! பூமி, வான், அந்தரம் என்னு மூன்றிடங்களிலும்நன்றாக நடப்பீர்களாக. அவை சூரிய வெளிச்சத்தால் பிரகாசமாகத் தெரிகின்றன. அவற்றை யாங்கள் புகழும் ஸ்தோத்திரங்களின் உண்மையும் (அவற்றைத் துவேஷித்தலாகிய) பொய்மையும் எங்கேபோயின? இன்னும் பழமையாக யாங்கள் செய்யும் யாகங்கள் எங்கே? வானம் பூமிகளே! எனது துன்பத்தை யுணர்வீர்களாக—(எ-று.)

வருக்கம் 20.

6. சத்தியநடைக்குத்தக்கபயனளியுமதுமாண்பு
மெத்திசை போயிற்று? அன்பையியைவருணன்றனோக்கந்
தத்தியதெங்ஙன்? சீர்சாலரியமான்றூரியெங்கே?
சத்துருதம்மையென்றுஞ்சயித்தியாந்தயங்கனன்றே;
ஒத்தநல்லுரோதவீயென்றுன்பமீதுணரற்பாற்றே.

(இ-ள்.) (தேவர்களே!) ஸத்தியமான நடைக்குத்தக்க பலனைத் தருமமது பெருமை யெங்கேபோயிற்று? வருணனது அன்பை யளிக்கும் பார்வையெங்கேபோயிற்று? அர்யமான் செல்லும் வழி யெது? யாங்கள் (எங்களுக்குத் தீங்கை யிழைத்த அல்லது எங்களைக் கிணற்றிற் றள்ளி மூடின)

# அஷ்டகம் 1 அத்தியாயம் 7.

சத்துருக்களை ஜயித்துவிளங்கட்டும். வானம் பூமிகளே! எனது துன்பத்தை யுணர்வீர்களாக—(எ-று.) 'பாப புண்யங்களும் நியாய வாசும் உலகத்தினின்றும் போயினவோ உமது பக்தன் இவ்வளவு கஷ்டத்தையடைய?'' என்பது கருத்தென்பார் லுட்விக்.

7. பூருவ காலந்தன்னிற் சுதை பிழிந் தெடுத்தபோது
நேருறப் பல போற்றுக்களைடியே யுரைத்தோன் யானே;
நீரும் வாதை சார்ந்த கவலைக ளென்னைத் தேடிச்,
சாருநீர் வேட்கை மானை விருகத்திற், றின்று சாரும்;
எருமுமோதவா யெனிடும்பை யீதுணரற் பாற்றே.

(இ-ள்.) பண்டைக் காலத்து ஸோமம்பிழிந்தபோது பலதுதிகளையுந் தேடியுரைத்தவன் நானே (வேறொருவருமில்லை. ஆகலால் என்னை என் கைவிட்டு விட்டீர்கள் என்று கேட்டபடி.) காட்டில் நீர்வேட்கையோடு அலையும்மானை ஓநாய் பிடித்துத் தின்னுவதுபோல வென்னைக்கவலைகள் தின்கின்றன. பூமிவானங்களே! எனது துன்பத்தை யுணர்வீர்களாக—(எ-று ) வ்ருகம், கோநாய், ஓநாய், காட்டுநாய். தமிழில் விருக மெனலாயிற்று.

(வேறு.)

8. கூபப் பித்தி யென்பக்கல் குறுகி யெல்லாத் திக்கினிலு
மாபத் தாக்குள் ளாக்கினவா லடையுஞ் சக்களத்திகளின்;
யூபக் கிரியை நூறுள்ளோய்! யோசனைகள், மூஞ்சூறு
சோபத் தறிநூ றின்னுதலிற், றுதிக்கு மென்னைப் பட்சிக்கும்;
தாபத் தணையா வான்புவியென் சங்கடத்தை யுணருகவே.

(இ-ள்.) இக்கிணற்றின் சுவர்கள் எனது பக்கத்தில் நாலுதிக்குக்கிலுஞ் சூழ்ந்து சக்களத்திகளிருவர் ஒரு புருஷனை யிம்சிப்பதுபோல என்னை யிம்சித்தன. சதக்கிருதுவே! மூஞ்சூறு கஞ்சி தோய்த்த சேடனது தறிநூலைத் தின்பதுபோலப் பலவித யோசனைகள் உன்னைத் துதிக்கும் என்மனத்தைத் தின்னுகின்றன. வானம் பூமிகளே! எனது கஷ்டமுணரத்தக்கது—(எ-று.) 'மூஷோநஶிச்நா' வென்பதற்கு சேடனது கஞ்சி தோய்ந்தநூலை எலிகள் தின்னுவதுபோல என்று ஸாயணர் உரை கூறியது யாஸ்கர் மதத்தை யொட்டி. ஆனால் ஶிச்ந சப்தம் வீர்யேந்திரியத்தைக்குறிக்கும், ஈண்டு வாலுக்கு உபசாரமாகக் கொள்ளத்தக்கது. எலிகள் வாலை எண்ணை நெய் முதலியவற்றிற் றோய்த்து நக்குவதுபோல வெனப்பொருள் கொள்ளலும் ஒன்று என்பார் அவர். மேனாட்டாசிரியர் யாஸ்கர் மதத்தையே பின்பற்றி அப்பொருள் வலிந்து கொண்டதாகும் என்பார். (Ludwig) லுட்விக்கென்பார் மாச்சிவலிங்கங்களைக் குறித்தமென்று கூறுவர். இவ்வுவமை மறுபடியும் மண். 10 சூக், 33 செய் 3ல் வருகிறது.

(வேறு)

9. இரணங்க ளேழு மோங்கிக் கிளருறு தலத்தெனில்லம்
வாமுறு குடும்பந் தாமும் வளமுறப் பொருந்தி நிற்கும்;
திரித னாப்தியனே யீது தெரிந்தவ; னுடன் விழுந்தோற்
குருகிய துதியுரைத்தா னுறெலா நீங்க வென்றே;
பெருகிய விரோதவா யென்பீழை யீதுணரற் பாற்றே.

## மண்டலம் 1. சூக்தம் 105.

(இ-ள்.) சூரியனது ஏழு கிரணங்களும் விளங்குமிடத்தில் எனது வீடும் என் முன்னோரது குடும்பமும் பொருந்தி யுள்ளன. இவ்வுண்மை யை ஆப்தியனாகிய திரிதனே யறிந்தவன். அறிந்து தன்னோடுகூடக்கிணற்றில் விழுந்தவனுக்காகக் கஷ்ட நிவாரணார்த்தம் இத்துதியைக் கூறினான். பூமி வானங்களே! என்னுடைய இக்கஷ்டத்தை யுணர்வீர்களாக—(எ-று.) திரிதன், அஞ்ஞானத்தைத்திரஸ்கரித்தவன்; அவனது முன்னோர் நட்சத்திர ரூபமாகவிண்ணிடத்தில் விளங்குகிறார்கள். அவன் புத்திரன் ஆப்தியன்; அவன் திரிதனே. 3வது 4-வது வரிகளில் தன்னையே படர்க்கைப் படுத்திக் கூறினன். வடமொழியில் ஜாமித்வாய என்றுள்ளது சகோதரற்கா' வென்று மாற்றிப் படித்தலுமொன்று. ஆனல் உடன் விழுந்தோற் கென்றது ஸாயணர் உரையிற் கண்டது 'ஜமதி கச்சதி இதி ஜாமி:' 'ஜமதிர்கதிகர்மா' யாஸ்கர். கூடக் கிணற்றில் விழுந்தவனாகிய குத்ஸனையுங் கருதிப் போலும் அவ்வகைத்துதித்தது.

10. பெருமைசார்வானிளுப்பட்பிறங்குமுன்னதத்தலத்தே
மருவுறுமைவர்,மாந்தர்விழைவனவருடிப்போர்க,
ளருளொடுமெனதிப்போற்றைத்தேவர்பாலிணைந்துதாங்கி
விரைவொடுமர்ப்பித்தீண்டுமீளுகதிருத்திசார்ந்தே;
யுருவவான்புவிகாளென்றனுறுகணீதுணரற்பாற்றே.

(இ-ள்.) பெருமை பொருந்திய வான் மத்தியில் உயர்ந்தவிடத்தி லுள்ள மனிதர் விரும்பியவற்றைத்தரும் ஐந்து ஜோதிகளும் என்னுடைய இத்தஸ்தோத்திரத்தை ஒன்றுகூடிச்சுமந்துகொண்டுபோயளித்து திருப்தியோடு திரும்பி வரட்டும். வானம் பூமிகளே !எனது துன்பத்தை யுணர்வீர்களாக—(எ-று.) ஐவர், ஐந்து ஒளிகளைக்குறித்தது. பூமியில் அக்கினியும் விண்ணிற் சூரியனும், அந்தரத்தில் வாயு, சந்திரன், நட்சத்திரங்களுமாக ஐந்து. இந்திரன், அக்கினி வருணன், அர்யமான், ஆதித்யன் என்னும் ஐவரையும் குறிக்குமென்பார் ஸாயணர்.

### வருக்கம் 21.

11. அழகியசிறகுவாய்ந்தவவைவயெங்கும்பரவிவானம்
பழகுறுமையந்தன்னிற்பரந்துநின்றன;வம்மார்க்கத்
தழுவியகாட்டுநாயைத்தடநதிநீரைத்தாண்டி
யொழுகியததனைப்பின்சென்றோடுவான்விலக்காநிற்கும்;
கிழமையாருரோதஸீயென்கேதமீதுணரற்பாற்றே.

(இ-ள்.) அழகிய சிறகோடு கூடியவை (அதாவது சூரிய கிரணங்கள் என்றபடி) எல்லாவிடத்தும் வியாபித்து வானத்தின் மையத்தில் பரந்தின்ளன. அந்த மார்க்கத்தில் ஆற்றைக்கடந்து வந்த காட்டுநாயைத்திரும்பியோடும்படிசெய்தன. வானம் பூமிகாள்! என் துன்பத்தைக் கருதுங்கள்—(எ-று.) அழகிய சிறகோடு கூடியவை சூரியகிரணங்களென்பார் சாயணர். நட்சத்திரங்களென்பார் மேனாட்டாசிரியர். அவரே, காட்டுநாயென்றது இருட்டு அல்லது சந்திர கிரஹணம் என்பார். திரிதன் கிணற்றில் விழுவதற்கு முன்பு அவனைத்தின்ன ஒரு கோநாய் ஆற்றைக்கடந்து வந்ததென்றும் சூரியவெளிச்சத்தைக்கண்டதும் அது திரும்பிப் போயிற்றென்றும் ஸாயணர் ஒருகதை சொல்லுவார். ஆனல் யாஸ்கரது மதம் அதுவல்ல அந்தரிட்ச மார்க்கத்தில் 12 கிரணங்களோடு கூடிய சூரியனது பாதையில் குறுக்கி

## அஷ்டகம் 1 அத்தியாயம் 7.

டும் சந்திரனே அச்சூரிய கிரணங்கள் ஒளி மழுக்குகின்றன வென்பது. அப: நீரென்றது அந்தரிட்ச மென்றெடுத்து வருகம் சந்திரமஸம் அதாவது சந்திரனையென்று பொருட் படுத்துவார் அவர்.

12. தேவர்காணைவமதாகக்குயிற்றியேசிறக்குமிவ்வும்
பாவுசீரோதும்பொற்றுப்பலர்துதியுறுதிவாய்ந்த,
தோவறவெழுகுருங்கிந்துவுநகத்தையோயாதுந்தும்;
மேவியசூரன்றன்மெய்க்கதிர்களை விரியாநிற்பான்;
தூவியபூமோதகமேயென்றுயாமீதுணரற்பாற்றே.

(இ-ள்.) தேவர்களே! புதிதாகச் செய்துசிறப்பைப் பெறும் உமது கீர்த்தியைத்தோற்றும் இந்துதி பல ரித்விஜர்களால் துதிக்கத்தக்க வுறுதியைப்பொருந்தியது. தடையில்லாம லொழுகும் ஆறு அடிக்கடி நீரைச் சுமந்துகொண்டு செல்லும். சூரியனும் தனது ஸத்திய கிரணங்களை விரிப்பான். பூமிவானங்களே! என் றுயரம் உணரற்பாலது—(எ-று.) ரிதம், சண்டு, உதகம் அல்லது நீரைக்குறிக்குமென்றார் ஸாயணர். ஆனால் அதன் உண்மைப் பொருள் இயற்கை யொழுங்கு என்பதாம். பகலிரவுகள் மாறிமாறி வருவதும், சூரியன் தனது வீதியிற் செல்லுவதும், மழை காலத்திற் பெய்வதும், அம்மழையினால் ஆறுகள் பொய்க்கா தொழுகுவதும், ஆகிய இவற்றையெல்லாம் அது பிண்டமாய்க்குறிக்கும். இக்கடையாய ஆற்றின் செய்கைக்கும் அச்சொல் உடயோகப்படுவதற்றான் ரிதம் நீரைக்குறித்ததுபோலும் என்பார் (Wallis) வாலிஸ் என்பவர் தமது ரிக்வேத அண்ட சாஸ்திரம் (Cosmology of the Rig-Veda,. P. 93) என்னும் நூலில்.

13. அங்கியே,தேவரோடுமெனைத்தவுன்னுறவுமெத்தப்
பொங்குறுபுகழிற்றுமாற்;பெரலிவுறநீயுமெங்க
டுங்கதல்லெக்கியத்தே,நாகளாறுஞானம்வாய்ந்தோய்!
தங்குக,மனுவுமகத்தின்றேவரைவணங்கியேத்தல்;
மங்கலிஸ்புவிவாலனென்றன்மம்மரீதுணரற்பாற்றே.

(இ-ள்.) அக்கினியே! தேவர்களோடும் பொருந்திய உனது பந்துத்தவம் மிகப்பிரசித்தி பெற்றது. சிறந்த ஞானத்தோடு கூடியவனே! மநுவினது யாகத்திற் றங்கினதுபோல எங்கள் யாகத்தினிடத்துத் தங்கித் தேவர்களைப் பூஜிப்பாயாக. பூமி வானங்களே! என் துன்பத்தையுணர்வீர்களாக—(எ-று.)

13. கனியறிவார்ந்தோன்றேவர்நாப்பணோர்தேவனானோன்
மனிதனைப்போலோதாவாகமருவியீண்டமர்ந்துஞானம்
புனையுமுத்தமனுமங்கிபொருத்துகதேவர்மாட்டிங்
கினிதின்யாமளிக்குந்தேவத்திரவியத்தினையிறையின்;
வனமுறுபுவிவாலனென்றன்வருத்தமீதுணரற்பாற்றே.

(இ-ள்.) மிக்க வறிவு நிறைந்தவனும் தேவர்களுக்கிடையில் ஒரு தேவனும், மனிதனைப்போல ஹோதாவாக இவ்விடத்துத்தங்கிய சிறந்த ஞானவானுமாகிய அக்கினி, யாங்கள் தரும் அவிப்பொருள்களை சாஸ்திர மரியாதைப்படி விரைவில் தேவர்களிடத்துச் சேர்க்கட்டும். புவி வானங்களே! என் வருத்தத்தை யுணர்வீர்களாக—(எ-று.)

15. அனிட்டத்தைதநீக்குந்தேவன்வருணனுங்காவல்சார்ந்தான்;
அனிட்டமில்லாதுமார்க்கமனைப்பவன்றனையிரப்பாம்;

## மண்டலம் 1. சூக்தம் 105.

இனிக்குமிம்மறையோனுள்ளத்தெழுந்துதியுரையாகின்றான்;
புனிற்றுறுதுதியைவாய்ந்தோன்பொருந்துகமகத்தின்மெய்யே;
சனித்தவான்புவிகாளென்றன்றுயரமீதுணரற்பாற்றே.

(இ-ள்) (அனிஷ்ட நிவாரணஞ் செய்யுந் தேவனாகிய) வருணன் எங்களைக் காக்குந்தொழிலைக் கைக்கொண்டான். மார்க்கத்தில் நேருந் துன்பங்களை நிவர்த்திக்கும் அவ்வருணனைப் பலன்றரும்படியாசிப்போம். இந்த ஓதுவான் தனது இதயத்திலெழுந்த இனியஸ்தோத்திரத்தைக் கூறினான். புதியதுதியை யடைந்தவனாகிய வருணன் எமது ரிதத்தில்(யக்ஞத்தில்)பொருந்துக. பூமிவானங்களே, எனது கஷ்டத்தை யுணர்வீர்களாக—(எ-று.)

### வருக்கம் 22.

16. தேவர்காளீண்டுதோற்றிச்சிறப்புறநிருமித்தோக்க
மேவியகதிரோன்மார்க்கந்தன்னைநீங்கலுமேமீறி
யாவலிற்கடக்கவல்லீரல்லிரே!மர்த்தியர்காள்!
பாவுறுமதனையுங்கள்பார்வையாலுணரீர்;மற்றுத்
தூவியலுரோதஸீயென்றுயரமீதுணரற்பாற்றே.

(இ-ள்.) தேவர்களே! இங்கே யாவருங்காண நன்றாக வமைக்கப்பட்டுப் பெருமை பொருந்திய சூரியனது பாதையை நீங்களும் தாண்டிச் செல்லமாட்டீர்கள் (ஏன்? பரிவிராஜகர்கள் ஸூர்யத்துவாரா பிரஹ்மலோகத்துக்குப் போகிறார்களென்ற சுருதி யுண்மையால். அதுவேயன்றித் தேவர்கள் வாழ்வுக்கு அதுவழியுமாவதாமென்க.) மரணதர்மத்தோடு கூடியவர்களே! அச்சூரியனை உங்கள் கண்ணினாற் காணமாட்டீர்கள். (மந்திர திருஷ்டாவாகியஎனக்குத்தெரிகிறது. பாபிகளாகிய உங்களுக்குத் தெரியவில்லையே யென்று துக்கித்தபடி.) வானம் பூமிகளே! எனது கஷ்டத்தை யறிவீர்களாக-(எ-று.)தேவர் வாழ்வுக்குச் சூரியன் வழியென்றதை ஸாயணர் விளக்குகிறார். ஸூர்யனால் ஸம்பந்தமாகிய ரிதுக்களேற்படுகின்றன. ரிதுகாலங்களில் யக்ஞங்கள் நடைபெறுகின்றன. யாகங்களால் ஸத்துக்களுக்கு ஜீவன மேற்படுகின்றது. அதனால் தேவர்களும் அதனை அதிக்கிரமித்து நடப்பதில்லையென்றபடி.(Benfey.) பென்வே யென்பவர் ஸூர்ய பந்தாவென்றது மேற் பன்னிரண்டாவது செய்யுளிற் கூறப்பட்ட சத்திய நெறி அல்லது இயற்கை யொழுங்கைக் குறிக்குமென்பார்.

17. கிணற்றில் வீழ்ந்தவதிப்பட்டதிரிதனுமுதவிகேட்டுப்
பணித்தனன்றுதியைத்தேவர்பால்,அவனிழைத்தபோற்றைக்
கணித்தனன்றேவவாசான்கண்ணுறுமவன்றன்பாபந்
துணித்தவன்றன்னைத்தூய்மைதுலங்குறவிடுவித்தற்குப்;
பிணித்தவான்புவிகாளென்றன்பீடையீதுணரற்பாற்றே.

(இ-ள்.) கிணற்றில் விழுந்த திரிதன் உதவியைநாடித் தேவரைத்துதித்தான். அவன் பாவத்தைச் சேதித்து அவனைவிடுதலைசெய்வதற்காக அவன் ஸ்தோத்திரத்தைத் தேவரட்சகனாகிய பிரஹஸ்பதி கேட்டான். வானம் பூமிகளே! என் பீடையை யறிந்து விலக்குவீர்களாக—(எ-று.)

18. செந்நிறந்தன்னைவாய்ந்தசீரினேர்விருகமோர்நாள்
மன்னியவெனதுபாதைமரட்டியான்படரும்போது
துன்னியோர்முறையென்றன்னைக்கண்டது;சுவனேயுற்றுப்

# அஷ்டகம் 1 அத்தியாயம் 7.

பின்னுறவரையுந்தச்சன்புரையப்பின்மறைந்து சென்ற,
துன்னும் வான்புவிகாளென்றனுறுகணீதுணரற்பாற்றே.

(இ-ள்.) செந்நிறமுள்ள கோநாயொன்று ஒருநாள் என் வழியில் வந்து என்னைச் சந்தித்தது. முதுகுவலியெடுத்த தச்சன் பின்னால் வளைந்து கொடுப்பதுபோலத் திரும்பிச்சென்று மறைந்தது. வானம் பூமிகளே! என் துன்பத்தை யுணருவீர்களாக.—(எ-று.) இவ்விருக்குக்கு வேறொருபொருளு முண்டு. அதுவருமாறு.

இடமகலுலகைத்தோற்றமெய்துறவிளக்கிமாதங்
கடமறவாக்குந்தோன்வானெறிசெல்லுமீனைத்
தலைப்படக்கண்டான்,பின்னரவற்றொடுசென்றான்,கூபத்
திடையுறுமென்பாலெய்தவெண்ணில,னென்னேயென்னே!
மிடையுறுமரோராதயீயென்விழுமமீதுணரற்பாற்றே.

(இ-ள்.) பெரிய உலகத்தைப் பிரகாசிப்பிக்கும் மாஸக்ருத்தாகிய சந்திரன், வானத்திற்செல்லும் நட்சத்திரங்களைக்கண்டு அவற்றோடுகூடச் சென்றான். கிணற்றில் விழுந்த வென்னிடத்துவரவெண்ணவில்லை. இது என்ன அநியாயம்! வானம் பூமிகளே! என் துன்பத்தையறிந்து அதனைக் கேட்கள்-(எ-று) சாஸ்டி, மா ஸக்ருத்தென பிரிக்காது மாஸக்ருத் என்று ஒரு சொல்லாயெடுத்துப் பட்ச, மாஸ, ரிது, அயனாதிகாலங்களுக்கு ஆதாரமாயுள் ளவிருகம் அல்லது சந்திரனென்றார் யாஸ்கர். விருகம், விவ்ருதஜ்யோதிஷ் கோவா, விக்ருதஜ்யோதிஷ்கோவா, விக்ராந்த ஜ்யோதிஷ்கோவா வென்பார். சாகல்யத்திலும் மாஸக்ருத்தென இரண்டு பதங்களாகவே பிரித் திலது. அதன்படி, 'தட்சனது புத்திரிகளாகிய நட்சத்திரங்கள் அடிக்கடி யென்னைப்பார்க்கின்றனை. அது தெரிந்தும் அந்த நட்சத்திரங்களினோடேயே செல்லுகிறான். என்னைக்கிணற்றினின்று தூக்கிவிடவருவதில்லை. இது அநுசிதம் என்பது பொருள்.

19. கூவியவிப்போற்றால்யாங்கோபதிதுணையின்வீரர்
யாவருமிணையிப்போரில்வெல்லுவாம்;எமதிப்போற்றைத்
தாவருபுவியும்வானுஞ்சிந்துவுமதிதிதானு
மேவுமித்திரவருணர்தம்மொடுவிழைந்துகாக்க.

(இ-ள்.) சப்தத்தோடு கோஷிக்கு மித்தோத்திரத்தை, யிந்திரனைத் துணையாகக் கொண்டவர்களும் வீரர்களாகிய புத்திர பௌத்திரர்களோடு கூடியவருமாகிய யாங்கள் கூறிச் சத்துருக்களை ஜயிப்போம். எமது இவ்வேண்டுகோளைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னுமிவர்கள் காக்கட்டும்—(எ-று.) கோபதி, இந்திரன்.

வருக்கம் 23.

## 106 மண்டலம் 1. அநுவாகம் 16. சூக்தம் 1.

7 இருக்குகள் கொண்டது.

ரிஷி. குத்ஸன்; வடமொழிச் சந்தம்: ஜகதி; 7 த்ருஷ்டுப்; தேவதை: விச்வதேவர்கள்.

# மண்டலம் 1 சூக்தம். 106.

1. இந்திரனைமித்திரனைவருணனையொன்றுமக்கினியையயிட்டுஞ்சார்ந்த
சுந்தரமாருதரதிதியிவர்களையாந்துணைபுரியத்தினமழைப்பாம்;
உந்துறுமேடவலுறையும்பாதையினிற்றேரதனையோட்டலொப்ப
நந்தமதுபாவமெலாநற்கொடைசால்வசுக்கணமினுநாடியோட்டல்.

(இ-ள்.) இந்திரனையும், மித்திரனையும், வருணனையும், அக்கினியையும்; மருத்துக் கூட்டத்தையும், யாங்கள் உதவிசெய்யுமாறு அழைப்போம். மேடும் பள்ளமுமாயுள்ள பாதையினின்றும் (தேர்ப்பாகர்கள்) தேரை யோட்டிச்செல்லுவதுபோல நமது பாபங்களை யெல்லாம், நல்லுதாரத்தோடு கூடிய வஸுக்கள் (செல்வநிறைந்த தேவர்கள்) நம்மைவிட்டுப் போகும்படி யோட்டி விடட்டும்—(எ-று.). வஸுக்கள் என்று பொதுவாகத் தேவர்களைக் குறித்து நின்றது. மித்திரன் முதலியோர் வரலாற்றை மண் 1. சூக் 88 செய் 1. மண். 1. 89. செய். 3. இவற்றிற் பார்க்க.

2. அந்தமுறுமதிதியினதரும்புதல்வீர், யாம்வாழ்வையடையச்சாலவன்
முந்துறுவீர்; தேவர்காள் போரினில்யாம்வெற்றியுறச்சுகத்தைத்தருவீர்;
உந்துறுமேடவலுறையும்பாதையினிற்றேரதனையோட்டலொப்ப
நந்தமதுபாவமெலாநற்கொடைசால்வசுக்கணமினுநாடியோட்டல்.

(இ-ள்.) அழகிய அதிதி புத்திரர்களே! (ஆதித்யர்களே!) யாங்கள் வாழ்வைப்பெறுமாறு முதற்கண் வருவீர்களாக. தேவர்காள்! யுத்தத்தில் எங்களுக்குச் சுகத்தை யளிப்பீர்களாக. பின்னிரண்டடியின் பொருள் மேற்பாட்டைப் போலவே—(எ-று.). வசுக்கள் நம்மின் நாடி யோட்டலெனப் பிரிக்க,

3. சந்தமுறத்துதிக்கவருந்தந்தையருமெமைக்காக்க, சார்ந்ததேவர்
சந்ததியென்றெண்ணுமிருதேவியர்வான்புவிகளிருதந்தாதிப்போரும்;
உந்துறுமேடவலுறையும்பாதையினிற்றேரதனையோட்டலொப்ப
நந்தமதுபாவமெலாநற்கொடைசால்வசுக்கணமினுநாடியோட்டல்.

(இ-ள்.) சுகமாகத் துதிக்கத்தக்கவர்களாகிய எங்களுடைய தந்தையர் (அக்கினிமுதலிய தேவர்கள்) எம்மைக்காக்கட்டும். எல்லாத்தேவர்களுக்கும்புத்திரஸ்தானத்திலிருந்து ஒழுங்கு அல்லது ஸத்தியத்தை வளர்ப்பவர்களாகிய வானம் பூமிகளும் எம்மைக் காக்கட்டும். மற்றது முன்போல—(எ-று.)

4. நந்துமனந்தனைப்பெருக்குநராசம்ஸன்றனையிவணுறும்வீரர்க்
கந்தமுறுநாயகனும்பூடனையுந்தோத்திரத்தோடணைந்திரப்பாம்;
உந்துறுமேடவலுறையும்பாதையினிற்றேரதனையோட்டலொப்ப
நந்தமதுபாவமெலாநற்கொடைசால்வசுக்கணமினுநாடியோட்டல்.

(இ-ள்.) மிகுந்த அன்னப்பொருள்களை (அல்லது மேனாட்டாசிரியருரைப்படி வலிமையை) வளர்க்கும் நராசம்ஸன் என்னும் தேவனாகிய, அக்கினியையும், வீரர்களுக்கு நாயகனாகிய பூஷனையும் நாம் ஸ்தோத்திரத்தோடு நெருங்கியாசிப்போமாக. ஏனையது முன்போலவே—(எ-று.) நராசம்ஸன். நரர்களால் துதிக்கப்படுபவன் அக்கினி. மண். 1. சூக் 13 செய் 3. பார்க்க. பூஷன் மண். 1. சூக். 14. செய். 3. பார்க்க.

5. மந்திரியே! யெக்காலுமெங்களுக்குச்சுகநெறியைமருவிப்பாய்;
சிந்தையபயநிவாரணியுநோய்மருந்தும்வேண்டியுனைசேர்ந்திரப்பாம்;
உந்துறுமேடவலுறையும்பாதையினிற்றேரதனையோட்டலொப்ப
நந்தமதுபாவமெலாநற்கொடைசால்வசுக்கணமினுநாடியோட்டல்.

## மண்டலம் 1. சூக்தம் 108.

2. அங்கிரர்பாடுஞ்சாமத்ததிட்டிதமடைந்ததேவர்
தங்குறுதுணையோடொன்ருச்சார்ந்தெங்கண்வருக;வேந்தன்
பொங்குதன்ருமமொய்ம்பின்,மருத்துவர்தங்கூட்டத்தி,
னங்கமாத்தஞ்சமீக,வதிதியுந்தேவரோடே.

(ன்-இ) ஆங்கிரஸர்கள் பாடும் ஸாமகானத்தைப் பெற்றதேவர்கள் தமது உதவிகளோடு ஒன்ருகக்கூடி எம்மிடத்து வருக. இந்திரன் சத்துருக்களை யடக்கும் தனது வலிமையோடும், மருத்துவர்களுடைய கூட்டத்தோடும் எங்களுக்கு அடைக்கலத்தைத் தரட்டும், அதிதியும் தன் புத்திரர்களாகிய தேவர்களோடு எங்களுக்கு அடைக்கலந்தரட்டும்—(எ-று.) மருத்துக்கள் எழுவராம், மண். 1 சூக். 88 செய். 1 பார்க்க. மொய்ம்பின், மொய்ம்பொடு; கூட்டத்தின் கூட்டத்தொடு என்க. அதிதியுந் தேவரோடே யீகவென்க.

3. பாவுறு முண்டி யங்கி வருண னிந்திரன் சவிதா
வாவலி னரியமானு மளித்திடல்; எமதிப் போற்றைத்
தாவறு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவு மித்திரர் வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ-ள்.) யாங்கள் யாசிக்கும் அன்னப்பொருள்களை, அக்கினி, வருணன், இந்திரன், ஸவிதா, அர்யமான் இவர்கள் தரட்டும். எங்களுடைய இந்த ஸ்தோத்திரத்தைப் பூமியும், வானமும், சிந்துவும், அதிதியும், மித்திரனும், வருணனுங் காக்கட்டும்— எ-று.)

### வருக்கம் 25.

## 108. மண்டலம் 1. அநுவாகம் 16. சூக்தம் 3.

### 13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: குத்ஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: இந்திராக்கினிகளிருவரும்.

1. சித்திரவொளிசார்தேரிற்றிகழுறுபுவனமுற்றுந்
தத்தியேசூழ்ந்துநோக்குந்தன்மைவாய்ந்ததனிலேறி
யொத்திவணணைவீ,ருன்னுமங்கியிந்திரர்காள்,சோம
வத்துவார்சுவையைவீண்டுபிழிந்தொழுகுவதைமாந்தீர்.

(இ-ள்.) இந்திராக்கினிகளே! சித்திரகாந்திபொருந்தியதும், எல்லாப்புவனங்களையும் பார்க்கும் பெருமைபொருந்தியதுமான தேரிலேறி இங்கு வருவீர்களாக. ஸோமம்பிழிந்துள்ளதைக் குடிப்பீர்களாக—(எ-று.)

2. இப் புவனங்கள் யாவுமெத்தகை விசாலமாயு
மொப்புறு கெம்பீரத்து முற்றன, விந்திராங்கீ,
யப்பெரும் பரப் பாழத்திற் சோமமு மமைந்துநிற்க
செப்புறுநீவிருள்ளத் திருத்தியிற் பருகவென்றே.

(இ-ள்.) இந்திராக்கினிகளே! இப்புவனங்களெல்லாம் எவ்வளவு விசாலமாயும் கம்பீரத்தோடுமுள்ளனவோ, அவ்வளவு விசாலமாயும் ஆழமாயும்இந்தஸோமமும் அமைந்திருக்கட்டும், நீங்கள் மனத்திருப்தியோடு பருகுமாறு—(எ-று.) கபீரம் காம்பீர்யோபேதம் என்பதற்கு ஆழ்ந்துள்ளது என்று மேனுட்டாசிரியருரை கூறுவார். இந்திராங்கீ நீர்க்கஸந்தி.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 7.

3. இந்திராக்கினிகாணீங்களியியையந்துமங்கலநாமத்தை
முந்துறவடைந்தீர்; கூடிமுயன்றனிரகியைக்கொன்றீர்;
வந்தனையளிக்குமேலீர்,மருவியீண்டமர்ந்துசோம
மந்தில்பேராற்றலூட்டுந்தகையதைக்குடிப்பீரன்றே.

(இ-ள்.) இந்திராக்கினிகளே! நீங்களிருவருஞ்சேர்ந்து கல்யாண நாமத்தை யடைந்தீர்கள். இருவருஞ் சேர்ந்து முயற்சிசெய்து விருத்திரனென்கிய பாம்பைக் கொன்றீர்கள். பிரார்த்தித்த பொருள்களைத்தரும் பெரியவர்களே! இங்குவந்தமர்ந்து பெரிய வல்லமையை யூட்டும்பெருமை வாய்ந்த ஸோமத்தைக் குடிப்பீர்களாக—(எ-று.)

4. சுருக்கிரண்டெடுத்துத் தூயதருப்பையைவிரித்துத்தீயைப்
பொருத்திநற்சமித்தைமூட்டும்பொழுதினிலழகுபெற்றார்;
உரத்துறுசோமஞ்சூழ ஆற்றியதிழுக்கவேகி
யருத்தியையளிக்குமெண்ணத்தமைகவிந்திரவங்கியே.

(இ-ள்.) (அத்வர்யுவும் பிரதிப்ரஸ்தாதாக்களுமாகிய விருவர்) இரண்டு சுருக்கிலும் நெய்யை எடுத்துப் பரிசுத்தமான தர்ப்பையை விரித்துத் தீயைப் பொருத்திச் சமித்துக்களை மூட்டும்போது கவுரவத்தையடைந்தார்கள். சுற்றிலும் ஊற்றப்பட்ட வலிமையைத்தரும் ஸோமமானது உங்களை ஆகர்ஷிக்க, இந்திராக்கினிகளே, எங்களது இச்சைகளையளிக்கும் எண்ணத்தினைமைக—(எ-று.) அழகு பெற்றார் என்பது மூலத்திலில்லை, அத்வர்யு, பிரதிப்ரஸ்தாதா வென்னு மிருவரு மென்றது ஸாயணருரையிற்கண்டது அவர்கள் யாகப்பிராமணர்கள் 16 பேரிற் சேர்ந்தவர்கள். அத்வர்யு, ஹோதா, பிரஹ்மா, ஆக்னீத்ரான், உத்காதா, பிரதிப்ரஸ்தாதா, நேதா, போதா, ஸுப்ரஹ்மண்ய, க்ராவஸ்தா, பிராஹ்மணாச்சமஸ, அச்சாவாக, ப்ரஸ்தோதா,. ப்ரசாஸ்தா முதலியோர் பதினறுவர். மேல் மண். 1 சூக். 95 செய். 6 பார்க்க

5. வீரியச் செய்கை கட்கா, மிகுவலி யிந்திராங்கீ,
பாரெலா மூலவுந் தோற்றம் படைத்த தற்காக, வண்மை
பெரியை யுங்களட்புப் பண்டுதொட்டொளிர்வதற்காத்,
தாரிளிற் சமைக்குஞ் சோமச் சுதையினைப் பருகுவீரே.

(இ-ள்.) மிக்கவலிமைபொருந்திய இந்திராக்கினிகளே! வீரியகிருத்தியங்களைச் செய்ததற்காகவும், உலகமெல்லா வற்றிலுமுள்ள சிருஷ்டிகளைப் படைத்ததற்காகவும், வள்ளன்மைபொருந்திய உங்களுடைய சிநேகம் பண்டைக்காலத்திலிருந்து விளங்குவதற்காகவும்,பூமியில் எல்லாராலும் பிழியப்படும் ஸோமத்தைக் குடிப்பீர்களாக—(எ-று) இந்திராக்கினிகளே எல்லா ஜகத்சிருஷ்டிகளையும் செய்கிறார்கள், இந்திரன் ஸூர்ய ரூபமாகவிருந்து மழையைப்பெய்விக்கிறான். மழையினால் எல்லாப்பிராணிகளுமுண்டாகின்றன வென்க.

### வருக்கம் 26.

6. மதன்முதலும்மைத்தேர்ந்தபொழுதினின்மொழிந்தாற்போலச்
சுதைப்பொருட்டசுரரோடுதொடர்ந்துபோராடவேண்டித்
ததைந்தது;இச்சத்தியத்தைத்தாங்களுமுணர்ந்துவந்து
துதைந்தசோமப்பெருக்கைத்தோய்ந்துவாய்மடுத்திடீரே.

# மண்டலம் 1 சூக்தம் 108.

(இ-ள்.) (இந்திராக்கினிகளே!) யான் முதன்முதலும்மை யக்ஞத்திற்காகத் தேர்ந்தபோது சொன்னதுபோலவே ஸோமத்தின் பொருட்டு அசுரர்களோடு தொடர்ந்து போராடவேண்டி வந்தது. இவ்வுண்மையை நீங்களுமறிந்து இவ்விடத்து நிறைந்துள்ள சோமவெள்ளத்தைக் குடிப்பீர்களாக—(எ-று.)

7. இந்திராக்கினிகா, ளுந்தஞ்சுயகிர்கத்திலேனு,
மந்தமார்மறையோனன் றியரசனேடேனுந், தூயீர்,
முந்துறுகளிப்பிஞழ்ந்துமூழ்கினுமங்ஙனின் று
வந்தருள்புரிவீர்சோமச்சுவையினைமாந்துவீரே.

(இ-ள்.) பரிசுத்தமான இந்திராக்கினிகளே! உம்முடைய ஸ்வக்கிரகங்களிலாதல், அல்லது வேறொரு பிராஹ்மண யஜமானன் வீட்டிலாதல், அல்லது ஒருக்ஷத்திரிய அரசனேடாதல் நீங்கள் உள்ளக்களிப்போடு அமர்ந்து கொண்டிருந்தாலும், யான் கூப்பிடும்போது வருவீர்களாக. வந்து, பிழிந்துள்ள ஸோமத்தைப் பருகுவீர்களாக—(எ-று.)

8. யதுக்கள்துர்வசர்களோடுபூருக்களநுக்களோடு
வதியினுந்துருகியரோடுறையினுமிந்திராங்கி!
துதியினரிச்சைதோய்ப்பீர்!தோயுமவ்விடத்தினின் று
மதிவிரைவோடுவந்தீண்டமிழ்தினைப்பருகுவீரே.

(இ-ள்.) யதுக்கள், துர்வசர்கள், பூருக்கள், அநுக்கள், த்ருஹ்யுக்கள் என்னும் ஐந்துவகை மாந்தர்களிடத்துறையினும், இந்திராக்கினிகளே! ஸ்தோதாக்களினுடைய இச்சைகளை வர்த்திப்பவர்களே! நீங்களுள்ள அவ்விடத்தினின்றும் விரைவாக வந்து இங்குள்ள சோமத்தைப் பருகுவீர்களாக—(எ-று) யதுக்கள் துர்வசர்கள், பூருக்கள், அநுக்கள், த்ருஹ்யுக்கள், இவர் யயாதியின்வம்சத்தினரான, யது, துர்வசன், பூரு, அநு, த்ருஹ்யு என்னும் ஐவரையும் வழிக்கொண்டவர்கள் என்பார் மேனுட்டாசிரியர். மண் 1 சூக். 7 செய். 9. பார்க்க. ஆனல் ஸாயணரோ. யதுக்கள் நியமம் வாய்ந்தஅஹிம் ஸகர்களென்றும், துர்வசர்கள் தீங்கிழைக்கும் மாந்தர்களென்றும், த்ருஹ்யுக்கள் பிறருக்குத் துரோகஞ்செய்யும்நினைப்புள்ளவர்களென்றும், அநுக்கள் ஞானமும் அநுஷ்டானமு முள்ளவர்களென்றும், பூருக்கள் திருப்திநிறைந்த இதரஸ்தோதாக்களென்றும் பொருள்கூறுவர்.

9. பிருதுவியாமடிக்கணேனும்பெருகுமத்தியத்திலேனு
மதிபரமோக்சத்தேனுமணையினு,மிந்திராங்கி!
துதியினரிச்சைதோய்ப்பீர்!தோயுமவ்விடத்தினின் று
மதிவிரைவோடுவந்தீண்டமிழ்தினைப்பருகுவீரே.

(இ-ள்.) தாழ்ந்ததலமாகிய பூமியிலேனும் மத்தியதலமாகிய அந்தரிட்சத்திலேனும் பரமோச்சஸ்தலமாகிய விண்ணிலேனும் எங்கிருந்தாலும்ஸ்தோதாக்களின் இச்சையை யளிக்கும் இந்திராக்கினிகளே! அங்கிருந்து வேகமாக வந்து ஸோமத்தைப் பருகுவீர்களாக—(எ-று.) மூலத்தில் பிருதிவ்யாம் என்பது மத்தியநிலைத் தீபகமாகவுள்ளது. அங்கேபிருதுவி யென்பதற்கு ஸ்தலம்என்பது பொருள். தாழ்ந்த ஸ்தலமாகிய பூமியிலாவது, மத்தியஸ்தலமாகிய அந்தரிட்சத்திலாவது பரமோச்சஸ்தலமாகியவிண்ணிலாவது என்று அந்வயிக்க. அடுத்தபாட்டில் பூமி இப்பொருளில்வந்துள்ளது. பிருதுவி, பிதுவியென மருவியது.

10. அதிபரமோக்ஷபூமியாயினுநடுவணேனுங்
கதுவிட்டலத்திலேனுங்கலக்கினு,மிந்திராங்கீ!
துதியினரிச்சைதோய்ப்பீர்!தோயுமவ்விடத்தினின்று
மதிவிரைவோடிவந்திண்டமிழ்தினைப்பருகுவீரே.

(இ-ள்.) முன்போலவே.—(எ-று.) மேற்பாட்டிற் சொன்ன முறையைமாற்றித்துதித்தது. ஈண்டு பூமி இடம், ஸ்தலம் என்னும் பொருளில் வந்தது.

11. வதிவதாகாயத்தேனுமண்டலத்தேனுமன்றிக்
குகாத்திளிரிற்புண்டிற்றுவலினு,மிந்திராங்கீ;
துதியினரிச்சைதோய்ப்பீர்!தோயுமவ்விடத்தினின்று
மதிவிரைவோடிவந்திண்டமிழ்தினைப்பருகுவீரே.

(இ-ள்.) காமாபிவர்ஷகர்களே! இந்திராக்கினிகளே! நீங்கள் வானத்திலிருப்பினும் பூமியிலிருப்பினும், மலை, நீர், பூண்டு இவற்றிற் கலந்திருப்பினும் அங்கிருந்து விரைவாக வந்து இங்குள்ள ஸோமத்தைப் பருகுவீர்களாக—(எ-று.) மண்தலம் எனப்பிரிக்க.

12. ஆதவனுச்சிகண்ணும்பொழுதவியன்னத்தைத்
காதலினுண்டுநீவிர்களிக்கினு,மிந்திராங்கீ!
மாதுதியினர்தமிச்சைவழங்குவீர்! அங்ஙனின்று
மாதரத்தோடுமீண்டுற்றமிழ்தினைப்பருகுவீரே.

(இ-ள்.) இச்சையை யளிப்பவர்களே! இந்திராக்கினிகளே! சூரியன் உச்சிக்குவரும் மத்தியானகாலத்தில் நீங்கள் அவியுணவையுண்டு ஸந்தோஷித்திருப்பினும், அங்கிருந்து ஆசையோடுமிங்குவந்து ஸோமத்தைக் குடிப்பீர்களாக—(எ-று.) அவியுணவையுண்டு களிக்கினு மென்றது உங்களது ஸ்வதேஜஸோடு விளங்கினும் என்றும் மூலத்திற்கு ஒருபொருள் கூறுவதுண்டு.

13. ஈவகையெஞ்சோமத்தைமாந்தியே,மிந்திராங்கீ!
பாவுபல்பொருளையீந்துபரித்திடுவீர்;எமதிப்போற்றைத்
தாவருபுவியும்வானுஞ்சிந்துவுமதிதிதானு
மேவுமித்திரவருணர்தம்மொடுவிழைந்துகாக்க.

(இ-ள்.) இவ்வகையாக, இந்திராக்கினிகளே, எங்களது ஸோமத்தைக் குடித்துப் பலபொருள்களையுந்தந்து பாதுகாப்பீர்களாக. எங்களுடைய இத்துதியைப், பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னும் இவர்கள் காக்கட்டும்—(எ-று.)

வருக்கம் 27.

## 109. மண்டலம் 1. அநுவாகம் 16 சூக்தம் 4.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை. குத்ஸன்; வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: இந்திராக்கினிகள்.

1. வாழ்வினைவிழைந்தயானென்மனத்தினுன்ஞாதியேனுந்
தாழ்விலாப்பந்துவேனுந்தயங்கிடச்சூழ்ந்தேன்;உம்மின்

படட்டும்—(எ-று.) மாந்தர் சூரியனைப் பேதித்துக்கொண்டு அர்ச்சிராதி மார்க்கத்துவாரா பிரஹ்மலோகத்தை யடைகிறார்களென்று சாந்தோக்கிய உபநிடதம் கூறும். அர்ச்சிராதி மார்க்கம் என்றும், தூமாதிமார்க்கமென்றும், இரண்டுமார்க்கங்களுண்டு. அவற்றுள் ஒன்று ஒளியுள்ளது. மற்றொன்று இருணிறைந்தது. உத்தராயனம் சுக்கிலபட்சம் முதலிய காலங்களில் இறப்பவர்கள் அர்ச்சிராதி மார்க்க வழியாகச் செல்லுகிறார்கள் என்றும், தட்சிணாயனம், அபரபட்சம் முதலிய காலங்களிலிறப்பவர்கள் தூமாதி மார்க்கமாக இருட்டு நிறைந்த வழியிற் செல்லுகிறார்களென்றும் கூறும்.

8. மேவலர்ப்புரம்பொடிப்பீர்,வீசுக,குலிசக்கையீர்,
காவல்செய்வீரெஞ்ஞாட்பி, னிந்திராக்னி;யெம்போற்றைத்
தாவருபுவியும்வானுஞ்சிந்துவுமதிதிதானு
மேவுமித்திரர்வருணர்தம்மொடுகிளைபுரந்துகாக்க.

(இ-ள்.) சத்துருக்களின் கோட்டைகளை யழிப்பவர்களே! வச்சிராயுதத்தைக் கையிற்றாங்கியவர்களே! இந்திராக்கினிகளே! பொன்னைக் கொடுப்பீர்களாக. எங்களது யுத்தத்தில் எங்களைக்காப்பீர்களாக. எமது துதியைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னுமிவர்கள் காக்கட்டும்—(எ-று.) வீசுக, கொடுக்க, தானஞ்செய்க என்பது பொருள்.

வருக்கம் 29.

## 110. மண்டலம் 1. அநுவாகம் 16. சூக்தம் 5.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ரிஷி குத்ஸன்; வடமொழிச் சந்தம்: ஜகதி, 8,9, த்ருஷ்டுப்; தேவதை: ரிபுக்கள்.

1. முன்பென்னலாற்றப்பட்டவினைதொழிலினிப்பொழுது(ம்)முயங்கினேனால்;
அன்புசிறந்தொழுகுமெனதருக்துதியுமதுபுகழார்த்திற்றன்றே;
இன்பினெலாத்தேவருக்கென்றிக்கடலு,ரிபுவர்கா,ளீண்டிநின்ற
தின்பமுறச்சுவாகாவென்றளிசோமமுண்டுகளிபெய்துவீரே.

(இ-ள்.) முன்பு என்னாற் செய்யப்பட்ட அக்கினிஷ்டோமாதி கருமங்களையே மீண்டும் செய்யத் தொடங்கினேன். அன்புமிக்க எனது அரியஸ்தோத்திரமும் உங்களது புகழை நிறைவித்தது. ரிபுக்களே! எல்லாத் தேவருக்காகவும் (விசுவதேவருக்காகஎன்றபடி) சமுத்திரமென்னத்தக்க இந்தச் ஸோம ரஸம் கூடிற்று. ஸ்வாஹாவென்று கூட்டியளிக்கும் அச்சோமத்தைக் குடித்து ஸந்தோஷத்தை யடைவீர்களாக—(எ-று.) கடல், ஸமுத்திரம் என்று வடமொழிமூலத்திலுள்ளது ஸமுத்ரஇவாயம் ஸோமரஸ: என்பார் ஸாயணர். கசியக்கூடியதாகிய இந்தஸோமச்சாறு என்பது பொருள். இரிபுவர்காள், ரிபுக்களே! ரிபுக்கள் மூவர்; ரிபு, விப்வான், வாஜன் என்பவர். இவர்கள் ஆங்கிரஸகோத்திரத்து ஸுதன்வனது புத்திரர்கள். (குத்ஸனும் ஆங்கிரஸகோத்திரத்தானே.) மண். 1. சூக். 20. செய். 1. நோக்குக.

2. பக்குவஞானம்பொருந்திப்பண்டிருந்தெங்கிளையினரைப்பரிவினோர்ந்து

# அஷ்டகம் 1 அத்தியாயம் 7.

மிக்குறுபல்போகமதையிச்சித்துத்தபோவனத்தின்மிகத்திரிந்த
மக்கணத்தாச்,சுதன்வனதுபுத்திரர்கா,ணெடுந்தூரமாடியோடிச்
சிக்கெனத்தாசுடன்சவிதுப்புவிக்கிரகந்தனைத்தேடிச்சேர்ந்திட்டீரே.

(இ-ள்.) ஸுதன்வனுடைய புத்திரர்களாகியரிபுக்களே! பக்குவனூர
ாத்தைப்பொருந்திப் பழையகாலத்திலிருந்து என்னுடைய ஆங்கிரஸவம்சத்
தில் வந்தபக்துக்களை புணர்ந்து, அவர்களளிக்கும்போக்கியங்களை விரும்பித்
தபோவனத்தில் உங்களிச்சைப்படித் திரிந்துகொண்டிருந்த அக்காலத்தில்
நெடுந்தூர நடந்து வந்து (அல்லது ஸாயணர் உரைப்படி நன்றாக சம்பாதிக்
கப்பட்ட தபஸோடுகூடியவர்களாய்)பூமியின் கண்அவியளிக்கும் ஸவிது அல்
லது ஸோமம்பிழியும் யஜமானனது வீட்டைத் தேடியடைந்தீர்கள்-(எ-று)
சுதன்வனும்,ஸுதன்வனும்ஆங்கிரஸ கோத்திரத்தாரென்பது முன்பேசொன்
னோர்.ஸவிது ஸோமயாஜகனென்பது ஸாயணர் கூற்று. ஸாயண ருரைப்ப
டி 'மிருந்தவமனைந்திங்கோடி', என்று செய்யுளை மாற்றிப்படிக்க. மண். 1.
சூக். 20 செய் 5. நோக்குக.

3\. மறைவுபடாச்சவிதாவையபேட்சித்துவேண்டுகோள்வகுத்தவன்று
குறைவுபடாவமரருதன்மையினையுங்களுக்குங்கொடுத்தானன்றே;
நிறைவிலுறவொன்றாகவசுரன்றான் குடிப்பதற்குநிருமித்திட்ட
கறையுறுமப்பாத்திரத்தைநான்குறுப்போடேய்ந்துறநீர்நாட்டினீரே.

(இ-ள்.) ஒருவராலும் மறைக்கப்படாத ஒளியோடு கூடிய ஸவிதா
வை விரும்பிப் பிரார்த்தித்தபோது அவன் குறையாததேவத்தன்மையை யுங்
களுக்குக்கொடுத்தான் (உங்களைத் தேவர்களாக்கினான் என்றபடி.) அசுரனாகி
ய துவட்டா ஒன்றாகச்செய்த ஸோமநிறைந்தபாத்திரத்தை நான்கு சமஸத்
தோடு கூடியதாகச்செய்தீர்கள்—(எ-று.) அசுரன் துவட்டா இவன் ஸோ
மத்தொட்டியும் 8 சமஸங்களும்செய்தவன். சமஸம் மரவை. பெரியபாத்தி
ரத்திலிருந்து மொண்டுஊற்றுவதற்கு உபயோகப்படுவது. மண். 1. சூக்.
20\. செய் 6. நோக்குக.

யாகமதிற்சிரத்தையொடுமிருத்துவிகராய்க்கருமமியற்றியன்றோர்
4\. யாகமதிற்சிரத்தையொடுமிருத்துவிகராய்ந்துநின்றும்;
சோகமறநின்றபோதமர்த்தியராயினர்மரிப்பைத்தோய்ந்துநின்றும்;
மாகமுறுகதிரொளியேயிரிபுவர்கள்சுதன்வனதுமைந்தரோராண்
டேகுருவதன்முன்னரேகருமமதிற்கலந்துபுகழெய்தினரே.

(இ-ள்.) யக்ஞகார்யங்களைச்சிரத்தையோடு ரித்விக்குக்களாயிருந்து
நடத்தினபோது அவர்கள் மரணதர்மத்தோடு கூடியவர்களாயிருந்தும் அமர்த்
தியர்களானார்கள். ஆகாயத்திலுள்ள சூரியனது வெளிச்சத்துக்குச் சமான
மான ஒளியோடு கூடிய ரிபுக்களாகிய சுதன்வனதுபுத்திரர்கள் ஒருவருஷ
மாவதற்குமுன்பே வஸந்தாதிகாலக்கிரமங்களிற்செய்யும் யக்ஞகர்மங்களுக்கு
இன்றியமையாதவர்களாகக் கருதப்பட்டுவிட்டார்கள்—(எ-று.)

அருகிருந்தோர்துதிக்கவுறுமிரிபுவர்கள்யாகமதையாற்றவாய்ந்த
5\. அருகிருந்தோர்துதிக்கவுறுமிரிபுவர்கள்யாகமதையாற்றலாக
வொருகலசந்தனை,யளவுகோலொன்றாற்கேத்திரம்போலுபாயமாக
வரையறுத்தா,ருவமைபெறும்பொருள்வேண்டிப்பிரார்த்தனைகள்வயக்
கித்தேவர்

சரைமரணம் வாயாதார் மத்தியினி லவிச்சிரைச் சாருவாரே.

## மண்டலம். 1 சூக்தம் 119.

செய்யுளில் ஸமுத்திரத்தைத் தாண்டி நாவாயிலும், ஸமுத்திரக் கரையிலி
ருந்து ஆக்கிர ஸிலத்துக்குப் போகக் குதிரை வாய்ந்த தேரிலும்
கொண்டு போனார்கள் என்று சொல்வது போலத் தெரியும். ஆனால் அச
வினிகளின் ஊர்தி, தண்ணீரிலும் அந்தர மார்க்கத்திலும் பூமியிலும் போக
வல்லது. தண்ணீரிற் போகும்போது அதற்குள்ள நூறு துடுப்புக்களும் உப
யோகமாகும். பூமியிற் போகும்போது அவ்வூர்தியிற் கட்டியபரிகள் அதனை
இழுத்துச்செல்லும். அந்தரத்திற் செல்லும் போது அப்பரிகளே தங்கள் சிற
குகளின் உதவியாற் பறந்து செல்லுமென்க. மண். 1. சூக். 116 செய். 3, 5
பார்க்க. திவோதாஸனைப் பற்றி மண். 1. சூக். 116. செய். 18 பார்க்க.

5. சேர்பணஞ்சார்காட்சியுறப்பூட்டியதேர்ப்பரியிரண்டைச்சுவைக்கநீரே
தாபமிலாக்குரல்கொண்டு தூண்டவவைமுந்தினவால்,முடிவுசார;
ஏழ்பரியோன்மகள்யுவதிநண்பினைவேட்டும்மருகேயெய்ந்தாளும்மைச்
சோபையுறுபதிகளெனநாயகராய்வரித்திட்டாள்துலங்கமாதோ.

(இ-ள்.) அழகிய தோற்றத்திற்காக உமது தேரிற் பூட்டிய இரண்டு
குதிரைகளையும் நீர் தூண்ட அவை போய்ச்சேர வேண்டிய விடத்தைச் சேர்
வதற்காக முந்தின. ஸூர்யபுத்திரியாகியயுவதி உம்முடைய ஸ்நேகத்தைவி
ரும்பி உம்மை யடைந்தவள் உம்மையே நாயகர்களாக வரித்தாள்—(எ-று.)
மணமானது தோழர்களாக வந்த உம்மை மணவாளர்கள் ஆக்கிக் கொண்டா
ளென்பது பொருளென்பார் (Ludwig) லுட்விக் கென்பவர். அது உண்
மையே. முதலில் அவளை ஸோமனுக்குக் கொடுப்பதாகவே யேற்பாடாயிருந்
தது. மண். 1 சூக். 34. செய். 5 பார்க்க.

வருக்கம் 20.

6. இரேபனைப்பீடிப்போர்தமுபத்திரவநின்றளித்திர்;எரியுங்கூட்டிற்
புராதனத்துவருந்தியவத்திரியையிமத்தாற்றணித்துப்புகழிற்
காத்திர்;
தராதபயசினைத்தருவான்சயுப்பசுவைச்சமைத்திட்டீர்;சார்ந்தவாயுள்
தராதலத்தேமிகப்பெருகவந்தநனுக்குதவியினைத்தந்தாண்டீரே.

(இ-ள்.) (அசுவினிகளே!) ரேபனை யிம்சித்த அசுரர்களது உபத்திர
வத்தினின்று அவனைக் காப்பாற்றினீர்கள். அக்கினிப்பொறி யிலகப்பட்டு
வருந்திய அத்திரியைப் பனியால் (அல்லது மழைத்தண்ணீரினால்) காத்தீர்
கள். சயுவினது பசு (பயஸை) பாலைத்தரும்படி செய்தீர்கள், வந்தநனுக்கு
ஆயுள் வளரும் வண்ணம் உதவி செய்தீர்கள்—(எ-று.) பயசு,(பயஸ்) பால்.
ரேபன், அத்ரி, சயு, வந்தநன் இவர்களைப் பற்றி, மண். 1. சூக். 112. செய்.
5; மண். 1 சூக். 51. செய். 3, மண். 1 சூக். 112 செய் 3, மண். 1 சூக். 119
செய். 11 இவற்றில் முறையே பார்க்க.

7. அழகமர்தோற்றத்தொளிர்வீருந்திறலிற்றொழில்புரிவீ,ராயுணீண்டு
பழகியதாற்சரையாரும்வந்தநனைத்தேர்போலப்பழுதுபார்த்துக்
குழகுறவேசெய்தனிர்;கேத்திரத்துறைந்துதிமறையோன்குலவுசன்மந்
றழூவும்வகையமைத்தீர்;எத்தடுப்போற்கும்பேருதவி சார்க டீரே.

(இ-ள்.) அழகிய தோற்றத்தையுடையவர்களே! சாமர்த்தியமான கார்
யங்களைச் செய்பவர்களே! வயது முதிர்ந்ததனாற் கிழத் தன்மையையடைந்த

# அஷ்டகம் 1 அத்தியாயம் 8.

வந்தனனைத், தேரைப் புதிப்பிப்பது போற் புதிப்பித்து, அவன் மீண்டும் இளமை பெறச் செய்தீர்கள். கருப்பத்திலிருந்து துதித்த வாமதேவன் கருப்பஸ்தானத்திலிருந்து வெளிப்படும் வண்ணம் (அதாவது பிறக்கும் வண்ணம்) செய்தீர்கள். உம்மைவணங்கும் யஜமானனுக்கும் உமது உதவிகள் நன்றுகப் பொருந்தட்டும்—(எ-று.) ஜன்மம், சன்மம், பிறப்பு. வந்தனனைக் கிணற்றினின்றெடுத்தது மாத்திரமேயன்றி யவனுக்கு மீட்டும் இளமை வருவித்ததாகவும் இச் செய்யுளாற் றெரிகிறது. வாமதேவன் அம்மணநமேயா னென்று ஸாயணர் சொல்லுகிறார். கேத்திரம், க்ஷேத்ரம், ஜநநஸ்தானமென்பார் ஸாயணர்.

8. தந்தைவிடுத்தலிற் றூரதேசமதிற் றுன்பார்ந்துதயங்குமன்னன்
முந்துதுதித்திடவவன்மாட்டேகினீர்;நீர்செய்தமெய்ம்பாருதி
நந்துவாமெனறியொளியிங்கடைந்திட்டது;அவனருகேகோடிநின்று
விக்தையுறநீர்செய்ததுணைவியப்பையெவ்வுயிர்க்கும்விளைவித்தன்றே.

(இ-ள்.) தந்தை விட்டுவிட்டதாற் றூரதேசமான ஸமுத்திரமத்தியில் விழுந்து துன்பப்படும் அப்புஜ்யன் உம்மைத் துதிக்க அவனிடத்துச் சென்றீர்கள். நீங்கள் செய்தவுதவி விண்ணையடைந்து சித்திர காந்தியோடு இப்பக்கத்தில் வீசிற்று. அவனது ஸமீபத்தே நின்று நீர் செய்த துணை யெல்லாவுயிர்களுக்கும் ஆசைப்படத்தக்கதாயிருந்தது—(எ-று.) புஜ்யனை அவன் றந்தை தள்ளி விட்டது மோசக் கருத்தோ டென்பார் மேனாட்டாசிரியர். ஊதி, உதவி.

9. பின்னுமுமை,மதுவாய்ந்தீர்,தேனீயுமதுவிரும்பிப்பெரிதும்பாடிற்;
றின்னுமவுசிஜன்சோமமார்ந்துமதங்கொண்டும்மையெதிர்விளித்தான்;
உன்னுமனந்ததீசியினதும்மனத்தோடொன்றுவித்திரோங்கும்பாய்மா
வின்னலத்தினீரமைத்ததலையுமக்குமன்பின்மதுவியம்பிற்றன்றே.

(இ-று.) மதுவடைந்தவர்களே! பின்னும் தேனீயானது மதுவைவிரும்பி யும்மை ஸ்தோத்திரஞ் செய்தது. உசிஜ புத்திரனாகிய கக்ஷீவான் ஸோமத்தைக் குடித்து மதத்தை யடைந்து உம்மைக் கூவினான். ததீசியைச்சேவித்து அவன் மனமும் உம்மனமும் ஒன்று படச்செய்தீர்கள். அவனுக்கு நீரமைத்த குதிரைத்தலை யுமக்கு அன்போடு மதுவித்தையை யுபதேசித்தது—(எ-று.) தேனீ யென்பதும் கக்ஷீவானையே குறிக்குமென்பார் மேனாட்டாசிரியர். ததீசி, மண். 1 குக் 116 செய். 12 பார்க்க.

10. பலர்நயக்குந்தன்மையதாய்ப்,பகைவரினைக்கடப்பதுவாய்ப்,பண்பின் வெண்மை
நலநயந்துயுத்தமதிலம்புகொடுசயிக்கரிதாய்,நாடுங்கன்மம்
பலநயக்கும்போதெல்லாமுபயோகப்படுஞ்சீர்த்தாய்ப்,பாகசாதன்
வலிநயந்துபகைவரைமேற்கொள்பரியைப்பேதுவுக்குமளித்தீரே.

(இ-ள்.) பலரும் விரும்புந் தன்மையோடு கூடியதாய், பகைவர்களைக் கடந்து செல்வதாய், வெண்மை நிறமுள்ளதாய், யுத்தத்தில் அம்பினாற் சயிக்கமுடியாததாய், இந்திரனது வலிமையை யொத்த பலம் பொருந்தியதாய்ப், பகைவரைச் சயிப்பதாயுள்ள குதிரையைப் பேதுவுக்களித்தீர்கள்—(எ-று.) பேது, மண். 1 குக். 117 செய். 9 பார்க்க.

## மண்டலம் 1 சூக்தம் 120.

மேற் சூக்தங்களில் அசுவினிகளைப் பற்றிச் சொல்லியவை சிற்சில இயற்கை யாவிர்ப்பவங்களைக் குறிப்பன வென்றும், அவற்றை வெறுங்கதைகளாக மாத்திரங் கொள்ளுவது நியாயமல்ல வென்றும் மோட்சமூலர்மதத்தை யநுஸரித்த (Benfey) பென்வே யென்பவர் கூறுவார். யாஸ்கர் மதமும் அதுவே. ஆனால் மூர் (Muir) என்பவர் அவை யுத்தகைகயவாயின் இத்தனை வேறுபட்ட பெயர்களோடு மாறுபட்ட பலசூணிலைகளில் வர்ணிக்க வேண்டிய அவசியமில்லை யென்றும், அதனால் அவ்வக் காலங்களில் அசுவினிகள் செய்ததாகச் சொல்லக் கேட்ட கதைகளைத் தொகுத்து இச்சூக்தங்களை யவ்விருடிகள் எழுதினதேயன்றி வேறில்லையென்றும் சொல்லுவர்.

வருக்கம் 21.

## 120. மண்டலம். 1 அநுவாகம். 17. சூக்தம் 5.

12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கட்சீவான்: வடமொழிச் சந்தம்: 1, 10, 11, 12 காயத்திரி, 2 ககுப், 3 காவிராஜ், 4 நஷ்டரூபி, 5 தநுசிரா, 6 உஷ்ணி, 7 விஷ்டாரப்ரஹதி, 8 க்ருதி, 9 விராஜ்; தேவதை: யசுவினிகள்.

ககுப் தநுசிரா, உஷ்ணி, க்ருதி இவை கந்தாநுஷ்டுபின் கலிவிருத்தத்திலும், விஷ்டாரப் ரஹதி ப்ரஹதி போலும், நஷ்டரூபி கலிநிலைத்துறையிலும், காவிராஜ் விராஜ் இவை மூன்றடித்தாழிசையிலும், யாக்கப் பட்டுள்ளன.

(வேறு.)

1. எத்துதிநு மருளினை யெய்த்திடும்?
ஒத்த வும்மிரு வோரையு, மச்வினீர்?
நத்தி யின்பனித் தோங்குவன் நாடின்யார்?
சித்த ஞான மிலானெங்ஙன் செய்வனே?

(இ-ள்.) எந்தஸ்தோத்திரமானது உமது அருளைக்கொண்டுவந்து தரும்? அசுவினிகளே! உம்மிருவரையும் விரும்பி உங்களுக்கு ஸந்தோஷ மூட்டுவோன் யார்? உமது மகிமை யறியாத அஞ்ஞானி யுங்களை யெவ்விதம் துதித்து வணங்குவான்?—(எ-று.)

(வேறு.)

2. இற்றே சடரும் மெழில் ஞானிகளை
யுற்றே வழி வேண்டுவர்; மற்றையவர்
சற்றே யுணரார்; பகைதாண்டறியீர்,
மற்றே விரைவின் மரணர்க் கருளீர்.

(இ-ள்.) இம்மாதிரியாகவே யறிவில்லாதவர்களும் ஞானிகளாகிய அச்வினிகளையடைந்து அவர்களைப்போற்றும் நெறிகளைக் கற்பிக்கும்படி வேண்டிக்கொள்வார்கள். அசுவினிகளல்லாத இதரர்கள் கொஞ்சமும் அந்நெறிகளை யுணரமாட்டார்கள். பகைவர்களாற் கடக்கமுடியாதவர்களே! வேகமாக மனிதர்களுக்குச் செல்வந்தருவீர்களாக.—(எ-று.)

# அஷ்டகம் 1. அத்தியாயம் 8.

(வேறு.)

3. மூதறிஞரா முமையா முற்படவே யழைக்கின்றோம்;
மூதறிஞர் நீரெமக்கின் றுயர்துதியை மொழிந்திடுக;
வாதராக்கி னுமைவிரும்பி யர்ச்சித்தே னிப்பொழுதே.

(இ-ள்.) வித்வாம்ஸர்களாகிய உம்மை யாங்கள் முன்னர் அழைக்கின்றோம். வித்வாம்ஸர்களாகிய நீரெமக்குச் சிறந்த ஸ்தோத்திரத்தைச் சொல்லிக் கொடுப்பீர்களாக. ஆசையோடு உம்மை இப்பொழுது ஹவியோடும் வணங்கினேன்—(எ-று.)

(வேறு.)

4 பக்குவமதிப் பிறகடவுளரை யான் வினவேன்;
மிக்குயர் வலித்தோற்றத்திர், விளம்புக வஷட்டோ
டெக்கியத்தா றற்புதம்; எங்களைக்காக்க,
மிக்க நல்வலிக் கருவமா ரதனின் மேற்றாக்க.

(இ-ள்.) அழகிய தோற்றத்தையுடையவர்களே! பக்குவ ஞானம்
பொருந்திய வேறுதேவர்களை யான் கேட்கமாட்டேன் (அவர்கள் உம்மளவு
பெருமையற்றவர்களாமென்க) யக்ஞத்தில் 'வஷட்' டென்னும் பிரயோ
கச்சொல் செய்யும் அற்புதத்தை யுரைப்பீர்களாக. மிகுந்த வலிமைபொ
ருந்தியதும் காவமுள்ளதுமான அதனின்று மெம்மையுயர்த்திக் காப்பாற்று
வீர்களாக—(எ-று.) வஷட் என்று செய்யும் ஆஹுதி நன்மையைத்தரும்.
ஆயினும் அம்மறையை முறை பிறழக் கூறியுபதேசித்தல் வெகுவாகிய
கேட்டைத்தரும். ஆகையால் அவ் 'வஷட்' டின் அற்புத சக்தியை யெமக்கு
ணர்த்துவதுடன் அதனால் ஒருவிதக் கேடும் நேராதபடி யெம்மைக்காப்பீர்க
ளாக வென்று கவிபிரார்த்திக்கின்ற கொண்டபடி யென்பார் மேனாட்டாசிரி
யர். வஷட்டென்பதற்கு, 'அக்கினியாகிய அவன் அவியைத் தேவர்களிடத்
துச் சுமந்து செல்லட்டும்.' என்பது பொருள். மண். 1 சுக். 31. செய். 5
நோக்குக.

(வேறு.)

5. கோடன் பிருகுநிகர் சோலையுற
நாடும் மறையைப் பஜ்ரன் குடியோன்
தேடி யறிவிற் பெரியோன் சிவனைப்
பாடு மதுவும் பலனுறுகவே.

(இ-ள்.) கோஷாவினது புத்திரனாகிய ஸுஹஸ்த்யன், பிருகுவி
னது சோலையைப்போன்ற சோலையை யடைவதற்காக விரும்பியோதிய
மந்திரத்தைப் பஜ்ரன் வம்சத்தலைவனாகிய கட்சீவான் தேடிக்கண்டுபிடித்து
(அன்னையச்சிக்கும்) வித்வானைப்போலப் பாடுகின்ற மந்திரமானது பலனோ
டு கூடியதாக விருக்கட்டும்-(எ-று.) கோஷா இம்மறையைக்கண்ட கட்சீவா
னது புத்திரி, பிரம்மவாதினி. அவளது மகன் பெயர் ஸுஹஸ்த்யன் என்
பார் ஸாயணர். மண். 1 சுக். 117 செய். 7 பார்க்க. பஜ்ரான் அங்கிரஸ குலத்
தவன். அவன்குலத்தவன் கட்சீவான் என்க.

வருக்கம் 22.

## மண்டலம் 1 சூக்தம் 120.

6. 'காயத்துறு தந்நடை மந்த முனோன்
காயத்திரி கேட் டவனம்பகமீந்
தேய் அச்சுவினீர், சுபவெம்பதியீர்,
ஏயத்தருவீர் பல'வென்ன் றறைவேன்.

(இ-ள்.) 'அசுவினிகளே! சுபப்பதிகளே! (கண்ணிழந்ததனால்) நடையின் வேகம் குறைந்த ரிஜ்ராச்வன் காயத்திரிச் சந்தஸாலான மந்திரத்தாற் றுதித்ததைக்கேட்டு அவனது கண்ணை யீந்தவர்களே! யான் விரும்பியபலன்களையும் தருவீர்களாக,' வென்று நானுந்துதிப்பேன்-(எ-று.) ரிஜ்ராச்வனென்பது ஸாயணருரை.

(வேறு.)

7. பெரிய செல்வந் தருபவர்காள், பேசு மதனைக் காத்தழிப்பீர்;
அரிய வசுவி னியகர்காள், நீங்க ளெம்மை நன்கிரட்சித்,
தூரிய வெமது பொருளிரிய வோங்கும் பாப சிந்தையுடன்
றிரியுங் காட்டு நாய்நின் றுஞ் செம்மை யாகக் காப்பீரே.

(இ-ள்.) அசுவினிகளே! மகத்தாகிய செல்வத்தையளிப்பவர்களோ! அச்செல்வத்தைக்காப்பவர்களும் அழிப்பவர்களும் நீங்களே! வஸுக்களே! நீங்கள் எங்களை நன்றாக இரட்சிப்பதுடன், பாப சிந்தையோடு எங்கள்சொத்துக்களைத்திருட நினைத்துத்திரியும் ஓநாய்போன்ற திருடன்கையிலகப்படாதபடியும் காப்பீர்களாக—(எ-று.) காட்டுநாய் ஓநாய், அது திருடனுக்காக நின்றது என்பார் ஸாயணர்.

(வேறு.)

8. விழையா னொருவன் வயினெம்மை வீடீர்;
எழில்கொண் மடியி லெமதுண் டியினைத்
தழுவுங் கபிலை தமகன் றினை விட்
டொழுகா தருவீ ரியலா வுழையே.

(இ-ள்,) (அசுவினிகளே!) எம்மை விரும்பாத பகைவனிடத்து எம்மைத்தந்து விடாதீர்கள். எமக்குவேண்டிய வுணவை மடியிற்றாங்கும் பசுக்கள் தங்கள் கன்றுகளை விட்டு எமக்கியலாத (எம்மால் அடையமுடியாத) இடத்திற்போய்விடாதபடி யருளுவீர்களாக—(எ-று.)

(வேறு.)

9. உமைவிரும்புந் துதியாளர் நண்பர்களை யோம்புதற்கென்
றமைவலிநற் றனமதனை யடைவர்; அதை யாமுமுறல்;
எம்மையடைவா னருளுகவாற் பசுவாரு மன்னமுமே.

(இ-ள்.) உமை விரும்பும் ஸ்தோதாக்கள் மித்திரர்களைக் (பந்துக்களையென்பார் ஸாயணர்.) காப்பாற்றுவதற்காக வலிமைபொருந்திய செல்வத்தை உம்மிடத்திலிருந்து பெறுவர். அத்தகைய வலிமை பொருந்திய செல்வமுடையவர்களாக எங்களையுஞ் செய்வீர்களாக. பசுக்களோடு கூடிய உணவினை யாங்களடையுமாறு செய்வீர்களாக—(எ-று.) பசுவாருமன்னமென்பதற்குப் பசுக்கள்தரும் பால்முதலிய உணவுப்பொருள்களென்பார் மேனாட்டாசிரியர்.

(வேறு.)

10. வன்புறையுஞ் செயன்மலி யச்வினிர்
கொன்பெறுந்தேர் குதிரையே யில்லது
மன்பெறவே யடைந்தனென்; பூரியும்
பின்பு வேண்டினென் பெற்றேனத் தேரினே.

(இ-ள்.) வலிமைபொருந்திய செயல்கள் மலிந்த அசுவினிகளது பெருமை வாய்ந்த தேர், குதிரை கட்டாது ஓடுவதை யான் (வணங்கி) யடைந்தேன். மிகுந்த கீர்த்தியோடு கூடிய செல்வத்தை விரும்பி அத்தேரினின்றும் அதனைப் பெற்றேன்—(எ-று.) பூரி ப்ரபூதம் ச்ரேய: என்பர் ஸாயணர் மிகுந்த கீர்த்தி அல்லது செல்வமென்றுஞ் சொல்லலாம்.

11. செல்வமோடுறு தேர், எந் தநுவினைப்
பல்கு மாறு புரிக; பலசுக
நல்கு தேரு நலக்க மனிதர்க்கண்
மல்கு சோமம் பருகத் திருகவே.

(இ-ள்.) செல்வத்தோடுகூடவுறும் (அசுவினிகளது) தேரே! நீ எமது சரீரத்தைப் (புத்திர பௌத்திராதி ஸந்தானங்களைப்பெறும் வண்ணம்) விஸ்தாரப்படுத்துவாயாக. பலவித ஸுகங்களையும் தருந் தேர், யஜமானர்களிடத்துள்ள ஸோமத்தைக்குடிக்க அசுவினிகளை யவரிடத்துச்கொண்டுவரட்டும்—(எ-று.) முன்னிலைப் படர்க்கை மாற்று.

12. வைகல் வேளைக் கனவின் விலகினேன்;
வைகு நற்றனம் வாய்ந்தும் பிறர்க்களித்
துய்குறுத வவனி னொழிந்தனென்;
உகென வழிவா றுபயருமே.

(இ-ள்.) விடியற்காலத்திற் றோன்றும் ஸ்வப்நத்தினின்றும் விலகினேன். பொருள் பெற்றும் ஈத்துண்ணானையும் நீங்கினேன். அத்தஸ்வப்நமும், இந்த லோபியும் விரைவில் அழிவது நிச்சயம்—(எ-று.) ஸ்வப்நத்திற்கண்ட பொருள் கைக்கெட்டாததுபோல அநுபவியாதவனது சொத்தும் விரைவில் அழியும். இவ்விரண்டுவகை சொத்தினாலும் எனக்கு உபத்திரவமில்லை யென்றுபொருள். இங்கே ஸ்வப்நமாத்திரத்தினால் ஸத்துவமின்மையைப் பிரதிபாதிப்பதிலிருந்து, துஸ்ஸ்வப்னங்களுக்கும் பல மில்லையெனப் போதருதலால், இச்செய்யுள் துஸ்ஸ்வப்ந நாசனீயம் என்பர் ஸாயணர்.

வருக்கம். 23.

## 121. மண்டலம் 1. அநுவாகம் 18 சூக்தம் 1.

23 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கக்ஷீவான்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: விச்வதேவர்கள் அல்லது இந்திரன்.

(வேறு.)

1. ஒளிபெறு வள்ள றன்னை யுன்னியங்கிரசன் மக்கள்
அளிபெற வோதும் போற்றை நாரளிப்பவனென் றேற்பான்?
தளியென விளங்கு மில்லச் சனத்தினைச் சாரும் போது
தெளிவுறு துதிக்கு வாய்ந்தோன் றிகழுவன் மகத்தின் மாடே.

# மண்டலம் 1 சூக்தம் 121.

(இ-ள.) காந்திபொருந்திய தான கர்த்தாவாகிய விந்திரனை யெண்ணி அவனது தண்ணளியைப்பெற அங்கிரஸன் வம்சத்து மக்களாகிய யாங்கள் கூறும் ஸ்துதிகளை, மாந்தரை (நேதாக்களை) க்காப்பவனாகிய அவ் விந்திரன் எப்பொழுது ஏற்பான்? யக்ஞக்கிரஹத்திலுள்ள ரித்விஜர்களாகிய ஜனங்களை யடையும் போது துதிக்க அல்லது வணங்கத் தகுந்தவனாகிய அவன் யக்ஞத்தினிடத்து விளங்கிமகிழ்வன்—(எ-று) ;தனியென விளங்கும் என்னும் அடை வடமொழி மூலத்திலில்லை; யக்ஞக் கிரஹங்களில் தேவ காரியங்கள் நடப்பதாற் கோயில் போன்று என்று கூறினார் செய்யுளில்.

2. வானுல கவனமைத்தான்; பசுக்களி னேதா, காந்தி
தானுறு முடலோன் றண்ணீர் சீர்பெற வவற்றின் பின்னர்
மானுற மேவாட விட்டான், மகத்துவ ளிரவின் பின்னர்,
ஈனுற வடவை கன்றை யியைத்,தொளி காண்பிட்டானே.

(இ-ள்.) அவ்விந்திரன் விண்ணுலகத்தை நிலைப்பித்தான். பணி யென்னு மசுரனாற் கவரப்பட்ட பசுக்களை (அதாவது மழைமுகில்களை)க் கொண்டு வரும் நேதாவாகிய விந்திரன் அப்பசுக்களின் பின் ஓடிவரும் மழைத் தண்ணீரைப் பிராணிகளுக்கு உபயோக மாகும் வண்ணம் பெய்வித் தான். மகானாகிய வவன் பெட்டைக் குதிரைக்கு ஸிலார்த்தமாக ஒரு பசுக் கன்றை யுற்பவிக்கச் செய்து, (தான் எப்பொழுதும் ஸ்வயம் பிரகாசனாயி ருந்தும்) இரவிற்குப்பின் (இனத்திலுறல் வைகளையுங் கொள்ளுக வென் பார் ஸாயணர்) ஸூர்ய ரூபமாக நின்று பிரகாசிக்கிறான்—(எ-று.) ஆட் விக் கென்பவர் மாதாம்சோ: என்பதை மாதரம்சாம் எனமாற்றி குதிரைக்கு (சூர்யனுக்கு) ச்சோடு, எல்லாவற்றிக்கும் தாய் நிலையிலுள்ள பூமியாகிய பசு வென்பர்.

3. அங்கிரர்க் கென்றும் பொன்னிக் தருணமாருஷை விளக்கித்
தங்கிய வவன் பழமை சாரழைப்பதனைக் கேட்க;
தங்கிடக் கொலையிற் சம்பந்தயக்கிறான்; விண்ணமைந்தான்
துங்கமாரிருகான் மாந்த ரொடு சதுஷ்பதங்களுக் கே.

(இ-ள்.) அங்கிரஸவம்சத்து மனிதர்களுக்கு அநுதினமும் தனத் தைய ளிப்பவனும், செந்நிறமான உஷஸைப் பிரகாசிப்பிப்பவனுமான (அச் (சூரியரூபமான) விந்திரன் பழமையாக உபயோகிக்கப்பட்டு இப்பொழுது நாங்கள் கூறும் ஆஹ்வானங்களை (அழைப்புக்களை) க்கேட்கட்டும். மேலும் அவ்விந்திரன் தனது ஆயுதமாகிய வச்சிராயுதம் எப்பொழுதும் கொலை யயின்ற வண்ணமாகவே யிருக்கும்படி செய்தான். இரண்டு கால் மனிதருக் காகவும், நாற்காற் பிராணிகளுக்காகவும் விண்ணைக் கீழ் விழுந்து விடாதபடி நிறுத்தினான்—(எ-று)

4. இதன் மதங் கொண்டு நீயு முனைத்துதி மகத்திற்காகப்
பதமுற முழங்கும் ஆக்கள் குகை பதிந்தவற்றைத் தந்தாய்;
கதமுற மூவுலகுங் கதித்துயர்ந்தவன், போர் சேரிற்
பதன்ற மகாஸுர வாட்டும் பாதைதையை விலக்குவானே.

## மண்டலம் 1 சூக்தம் 121.

தொண்ணூறாறையுந் தாண்டித் தூர தேசத்திற் போயிருக்கும்படி செய்தாய்—(எ-று) எதசன், ஓர் ரிஷியின் பெயராக மண். 1 சூக். 61 செய். 15ல் வந்துளது, (ஆண்டு எதஸன் என்பதை எதசனெனத் திருத்திக் கொள்ளுக.) ஈண்டு அது சூரியனை யிரவில் மேற்கிலிருந்து கிழக்கிற் கொண்டு வந்து நிறுத்தும் ஒற்றைக் குதிரையாகச் சொல்லப் படுகிறது. தைத்திரீயஸம்ஹிதை 1—6—4 பார்க்க எதசோக என்னும் வடமொழிப் பதத்திற்கு எதசனும் என்றும் உரை கூறுவர் ஸாயணர். (M. Bergaigne) பெர்கேன் என்பவர் எதசன் என்னும் ரிஷிக்குப் பதிலாக அவ்விருடியாற் காக்கப் படும் அக்கினியை யாவது, அல்லது ஆஹுதி செய்யப்படும் ஸோமத்தை யாவது கூறலா மென்றும், அந்த ஸோமமே அடிக்கடி குதிரையாகவுருவகிக்கப் படுவது வேத மரபென்றும், ஆதலால் எதசன் ரிஷி குதிரை ஆகிய இரண்டையுங் குறித்தல் தகுதியேயென்றும், கூறுவர்.

14. இந்திர, வெமை யித்துன்பி னெடுக்க வச்சிரத் தோய்; மேலு
மந்தி லெம் பாப மெல்லா மபகரித்திடுக; தேரி
னந்துறு செல்வம், பாய்மா நலக்குவை கூட்டுமேதை
யெந்தஞ் சீர், உண்மை, யுண்டி யெண்ணியே யிடுக நன்கே.

(இ-ள்.) வச்சிரியே! இந்திரனே! எம்மை இக்கஷ்டத்தினின்றும் நீக்குக. எமது பாபங்களை யெல்லாம் பரிகரிப்பாயாக. எங்களுடைய கீர்த்தியையும், ஸத்தியவாக்கையும், உணவையும் தருதி எங்களுக்குத் தேரோடு கூடிய குதிரைகளாகிய செல்வத்தை நன்றாக வளிப்பாயாக—(எ-று.)

15. வலி யினிற் பெருத்தோ, யுன்றன் னருண்மதி யெப்போது
நலிவுறா தெம்மைச் சேர்க; நல்லன மெம்மைச் சூழ்க;
வலியுறு பதி நீ கோக்கள் யாம்பெற மகவா னீக;
பொலிவுறு துதியோர் யாமுஞ் சந்ததி பொருந்தி வாழ்க.

(இ-ள்.) வலிமையிற் பெரிய விந்திரனே! உனது அநுக்கிரக புத்தி யெப்போதுங் கெடாம லெம்மைச் சேருக. நல்ல அன்னமானது எம்மைப் பொருந்தட்டும், மகவானே! தனஸ்வாமியாகிய நீ எங்களுக்குப் பசுக்களை யளிப்பாயாக. ஸ்தோதாக்களாகிய யாம் புத்திர பௌத்திராதி ஸந்தானங்களைப்பெற்று வாழ்க—(எ-று.) அர்ய: என்பதற்கு தனஸ்வாமியாகிய நீ யென்பார் ஸாயணர். ஆனால் சத்துருவினுடைய வென்பார் மேனாட்டாசிரியர், அற்றேல், 'நலிவுறு பகைவன் காலி நாம் பெற மகவானீக;' என மூன்றா மடியை மாற்றிப் படிக்க. இச் சூக்த தேவதை விச்வ தேவர்கள் அல்லது இந்திரனைக் குறிக்கப் பட்டிருப்பினும், ரிஷி இந்திரனையே முற்றிலும் துதித்துள்ளார்.

வருக்கம் 26.

ஆகச் செய்யுள். 1333.

### 8-வது அத்தியாயம் முற்றும்.

### முதலஷ்டகம் முற்றிற்று.

## அஷ்டகம் 1 அத்தியாயம் 121.

வேதங் கதியென்று மென்னுணர்வைப் பல்லுரையாம்
போதந் தருதாழி பூட்டிநவ — நீதமெனுங்
கட்டுரையோ டிந்நூலைக் கண்டே னருளாளர்
தொட்டுணருந் தூய்மை சுவைக்கு.

(இ-ள்.) வேதமேகதியென்றெண்ணிய வென் பத்தியைப் பலபாஷ்யங்களாகிய தாழியிற் செலுத்திக் கடைந்தெடுத்ததாகிய 'நவநீதம்' என்னும் பெயரிய உரையோடு கூடிய இந் நூலைச் சொன்னேன், இதனை அருளாளர்கள் படித்தறியும் வண்ணம்—(எ-று.)

வேத புருஷாய மங்களம்.

## பிழை திருத்தம்.

பக்கம் 191. பாட்டு 6. அடி 2. தழிப்பானனினும் என்பதை தழிப்பனைவையெனினும் எனத் திருத்திக் கொள்க.

பக்கம் 362 வரி 16 பராவ்ருஜனது குருட்டுத்தன்மையை நீக்கினீர்; [illegible] பராவ்ருஜனது முடத் தன்மையை நீக்கினீர்கள். ரிஜ்ராச் [illegible] குருட்டுத் தன்மையை நீக்கினீர்கள்; என மாற்றுக.

[illegible] 382 [illegible] செய்யுளின் உரை முடிவில், மேல் மண். 1 சூக் [illegible] பார்க்க எனக் கூட்டுக.

பக்கம். 391. [illegible] செய்யுளின் உரையில் 4 வது வரியில், கண்ணை [illegible] செய்கை போற்றற் குரியதாம், ந்ருஷதன் [illegible] செவிட்டை நீக்கினீர்கள்; எனப்படிக்க.

[illegible] உரையின் கடை மூன்றடிகளை, [illegible] யைக்கண்டறிந்த [illegible] வாசிக்கும் அச் சத்தத்தைக் கேட்டே உஷ [illegible] சொன்னதாகவும் ஒருகதை யுண்டு. அசுவினி [illegible] நடைபெறுவது யாவர்க்குந் தெரிந் [illegible] ஸ்தோத்ரங்களை நாடி யசுவினிகள் செல் [illegible] பாட்டோ அவர்களுக்காக ஸ்தோத்ரங்கள் [illegible] கண்ணுவ ரிஷியின் காதிற்பட அவன் விடி [illegible] யுணர்ந்தான்; என் மாற்றிப்படிக்க.

[illegible] பக்கம், 1 [illegible] பாட்டு உரையின் கடையடியிலுள்ள 120 சூக்த [illegible] மண். 1. சூக்தம். 119 செய். 4. பார்க்க வெனத்திருத்திக் [illegible].

## முதலஷ்டக அட்டவணை.

இம்முதலஷ்டகத்தில், மதுச்சந்தஸ் முதலிய 16 ரிஷிகள் பாடியுள்ளார். இதனிடத்தாக் காயத்திரி முதலிய 23 சந்தஸ்களும் 121 சூக்தமுமுண்டு. இவ்வஷ்டகத்திற் பாடல்பெற்ற தேவதைகள் அக்கினி முதற் முப்பத்தறுவராம். இவருள் இணைத்தேவதைகள் இந்திரா வருணர் முதற் பதின்மராம்.

## முதல் அஷ்டக அட்டவணை.

இந்நூலின் கண் வரும் தெய்வப் பெயர் மக்கட் பெயர்களுக்கு ஓர் அகராதி இந்நூலினிறுதியில் வெளிவரும். வடமொழிச் சந்தங்களெல்லாம் எழுத்து வகையாலமைக்கப்படுவன. அம்மாத்திரி எழுத்தெண்ணி யமைக்கப்படும் தமிழ்ச் செய்யுள் வகைகள் மிகச் சிலவாதலின் அதனைக்கருதாது வடமொழி இருக்குக்களின் அடிப்பெருமை சிறுமைக்கேற்பத்தமிழ்ச் செய்யுள் வகைகளை யமைத்துள்ளதோடு அவ்வொழுங்கே நூன் முழுதும் பின்பற்றப் பட்டுள்ளது.

| அஷ்டகம். | வருக்கம். | சூக்தம். | வடமொழிரிக். | தமிழ்ச்செய்யுள். |
|---|---|---|---|---|
| 1-வது | 37 | 19 | 194 | 194 |
| 2-வது | 38 | 13 | 189 | 189 |
| 3-வது | 35 | 14 | 173 | 173 |
| 4-வது | 29 | 15 | 152 | 152 |
| 5-வது | 31 | 19 | 185 | 155 |
| 6-வது | 32 | 14 | 163 | 163 |
| 7-வது | 37 | 18 | 172 | 172 |
| 8-வது | 26 | 9 | 135 | 135 |
| ஆக. 8 | 265 | 121 | 1363 | 1333 |

## முதலஷ்டகத்தின் சூக்த அட்டவணை.

### முதலத்தியாயம்.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 1 | மதுச்சந்தஸ் | அக்கினி | காயத்ரி | கலிவிருத்தம். |
| 2 | ஷை | வாயு இந்திரவாயுக்கள், மித்திராவருணர். | ,, | ,, |
| 3 | ,, | அசுவினிகள் இந்திரன், விச்வ தேவர்கள், ஸரஸ்வதி. | ,, | ,, |
| 4 | ,, | இந்திரன். | ,, | ,, |
| 5 | ,, | ,, | ,, | ,, |
| 6 | ,, | இந்திரன், மருத்துக்கள். | ,, | ,, |
| | | இந்திரா மருத்துக்கள். | ,, | ,, |
| 7 | ,, | இந்திரன். | ,, | ,, |
| 8 | ,, | ,, | ,, | ,, |
| 9 | ,, | ,, | ,, | ,, |
| 10 | ,, | ,, | அநுஷ்டுப் | கலிநிலைத்துறை |
| 11 | ஜேதா | ,, | ,, | ,, |

# ரிக்வேத ஸம்ஹிதை.

| ஸூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 12 | மேதாதிதி. | அக்கினி. | காயத்ரி. | கலிவிருத்தம். |
| 13 | ,, | அக்கினியின்பல ரூபங்கள். | ,, | ,, |
| 14 | ,, | விச்வதேவர்கள் | ,, | ,, |
| 15 | ,, | ரிதுக்கள்<br>இந்திரன்,<br>மருத்துக்கள்<br>துவஷ்டா,<br>அக்கினி,<br>மித்திராவருணர்,<br>அச்வினிகள். | ,, | ,, |
| 16 | ,, | இந்திரன். | ,, | ,, |
| 17 | ,, | இந்திரா வருணர். | காயத்ரி, பாதநிச்ருத். | ,,<br>வேறோர்வகைக் கலி |
| 18 | ,, | பிரஹ்மணஸ் பதி, இந்திர ஸோமர் தக்ஷிணை. | காயத்ரி. | கலி விருத்தம். |
| 19 | ,, | அக்கினியும் மருத்துக்களும். | ,, | ,, |

## 2–வது அத்தியாயம்.

| ஸூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 20 | ,, | ரிபுக்கள். | ,, | ,, |
| 21 | ,, | இந்திராக் கினிகள். | ,, | ,, |
| 22 | ,, | அச்வினிகள்,<br>ஸவிதா,<br>அக்கினி,<br>இந்திராணி,<br>வாருணி,<br>அக்கினாயி<br>மூவரும்<br>வானம் பூமி<br>கள் பூமி, விஷ்ணு. | ,, | ,, |
| 23 | ,, | வாயு,<br>இந்திர வாயுக் கள், மித்திர வருணர்கள், விச்வதேவர் கள், பூஷன்,<br>ஆப: | ,,<br>புரஉஷ்ணி,<br>அநுஷ்டுப்<br>பிரதிஷ்டா. | ,,<br>கந்தர அநுபூதிச் செய்யுள்<br>கலித்துறை.<br>கலிவிருத்தம். |

# முதலஷ்டக அட்டவணை.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம் | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 24 | சுநச்சேபன் | வருணன், அக்கினி, ஸவிதா. | த்ருஷ்டுப் காயத்ரி | அறுசீர்க்கழி நெடில், கலிவிருத்தம். |
| 25 | ,, | வருணன். | காயத்ரி | கலிவிருத்தம். |
| 26 | ,, | அக்கினி | ,, | ,, |
| 27 | ,, | ,, | காயத்ரி த்ருஷ்டுப் | கலிவிருத்தம். அறுசீர்க்கழி நெடில், |
| 28 | ,, | இந்திரன், உரலும் உலக்கையும். | அநுஷ்டுப் காயத்ரி | கலிநிலைத்துறை கலிவிருத்தம். |
| 29 | ,, | இந்திரன். | பங்க்தி | அறுசீர்க்கழி நெடில் ஓரடி மேல் வைப்பு |
| 30 | ,, | இந்திரன், அசுவினிகள், உஷஸ். | காயத்ரி பாதநிச்ருத் த்ருஷ்டுப் | கலிவிருத்தம். வேறு. அறுசீர்க்கழி நெடில். |
| 31 | ஹிரண்யஸ்தூபன். | அக்கினி. | ஜகதி, த்ருஷ்டுப். | 4 காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், அறுசீர்க்கழி நெடில். |
| 32 | ,, | இந்திரன், | த்ருஷ்டுப். | அறுசீர்க்கழி நெடில். |

## 3—வது அத்தியாயம்.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம் | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 33 | ஹிரண்யஸ்தூபன் | இந்திரன், | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 34 | ,, | அசுவினிகள், | ஜகதி த்ருஷ்டுப் | வேறு 4 காய்ச்சீருள்ளது, அறுசீர்க்கழி நெடில், |
| 35 | ,, | ஸவிதா, அக்கினி, மித்திராவருணர்கள். இரவு. | ,, | ,, |
| 36 | கண்வன். | அக்கினி, யூபம். | ப்ராஹதி ஸதோப்ராஹதி. | வேறு 3ம் சீரும் 6ம் சீரும் காய்ச்சீருள்ளது, எழுசீர்க்கழி நெடில். |

## ரிக்வேத ஸம்ஹிதை.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 37 | கண்வன். | மருத்துக்கள். | காயத்ரி. | கலிவிருத்தம். |
| 38 | ,, | ,, | ,, | ,, |
| 39 | ,, | ,, | ப்ருஹதி ஸதோப்ருஹதி | சூக். 36 போல. |
| 40 | ,, | ப்ரஹ்மணஸ்பதி | ,, | ,, |
| 41 | ,, | வருணன், மித்திரன் அர்யமான், ஆதித்தியர்கள் | காயத்ரி | கலிவிருத்தம். |
| 42 | ,, | பூஷன். | ,, | ,, |
| 43 | ,, | ருத்திரன், மித்திரா வருணர், ஸோமன். | அநுஷ்டுப். | கலிநிலைத் துறை. |
| 44 | ப்ரஸ்கண்வன். | அக்கினி. | ப்ருஹதி, ஸ்தோப்ருஹதி. | 3ம் சீரும் 6ம் சீரும் காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், எழுசீர்க்கழி நெடில். |
| 45 | ,, | அக்கினி. | அநுஷ்டுப் | கலிநிலைத் துறை. |
| 46 | ,, | அசுவினிகள். | காயத்ரி. | கலிவிருத்தம். |

### 4–வது அத்தியாயம்.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 47 | ப்ரஸ்கண்வன் | அசுவினிகள். | ப்ருஹதி, ஸதோப்ருஹதி. | சூக்தம் 44 போல. |
| 48 | ,, | உஷஸ் | ,, | ,, |
| 49 | ,, | ,, | அநுஷ்டுப். | கலிநிலைத் துறை. |
| 50 | ,, | ஸூர்யன் | காயத்ரி, அநுஷ்டுப். | கலிவிருத்தம், கலிநிலைத் துறை. |
| 51 | ஸவ்யன் | இந்திரன். | ஜகதி, த்ருஷ்டுப். | 4 காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், அறுசீர்க்கழி நெடில் |
| 52 | ,, | ,, | ,, | ,, |
| 53 | ,, | ,, | ,, | ,, |

# ரிக்வேத ஸம்ஹிதை.

| ஸூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 37 | கண்வன். | மருத்துக்கள். | காயத்ரி. | கலிவிருத்தம். |
| 38 | ,, | ,, | ,, | ,, |
| 39 | ,, | ,, | ப்ரஹதி ஸதோப்ரஹதி | ஸூக். 36 போல. |
| 40 | ,, | ப்ரஹ்மணஸ் பதி | ,, | ,, |
| 41 | ,, | வருணன், மித்திரன் அர்யமான், ஆதித்தியர்கள் | காயத்ரி | கலிவிருத்தம். |
| 42 | ,, | பூஷன். | ,, | ,, |
| 43 | ,, | ருத்திரன், மித்திரா வருணர், ஸோமன். | அநுஷ்டுப். | கலித்தலைத் துறை. |
| 44 | பிரஸ்கண்வன். | அக்கினி. | ப்ரஹதி, ஸ்தோப்ரஹதி. | 3ம் சீரும் 6ம் சீரும் காய்ச்சீருள்ள அறுசீர்க் கழி நெடில், எழுசீர்க்கழி நெடில். |
| 45 | ,, | அக்கினி. | அநுஷ்டுப் | கலித்தலைத் துறை. |
| 46 | ,, | அசுவினிகள். | காயத்ரி. | கலிவிருத்தம். |

## 4–வது அத்தியாயம்.

| ஸூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 47 | பிரஸ்கண்வன் | அசுவினிகள். | ப்ரஹதி, ஸதோப்ரஹதி. | ஸூக்தம் 44 போல. |
| 48 | ,, | உஷஸ் | ,, | ,, |
| 49 | ,, | ,, | அநுஷ்டுப். | கலித்தலைத் துறை. |
| 50 | ,, | ஸூர்யன் | காயத்ரி, அநுஷ்டுப். | கலிவிருத்தம். கலித்தலைத் துறை. |
| 51 | ஸவ்யன் | இந்திரன். | ஜகதி, த்ருஷ்டுப். | 4 காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், அறுசீர்க்கழி நெடில் |
| 52 | ,, | ,, | ,, | ,, |
| 53 | ,, | ,, | ,, | ,, |

# ரிக்வேத ஸம்ஹிதை.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 37 | கண்வன். | மருத்துக்கள். | காயத்ரீ. | கலிவிருத்தம். |
| 38 | ,, | ,, | ,, | ,, |
| 39 | ,, | ,, | ப்ரஹதி ஸதோப்ரஹதி | சூக். 36 போல. |
| 40 | ,, | ப்ரஹ்மணஸ்பதி | ,, | ,, |
| 41 | ,, | வருணன், மித்திரன் அர்யமான், ஆதித்தியர்கள் | காயத்ரி | கலிவிருத்தம். |
| 42 | ,, | பூஷன். | ,, | ,, |
| 43 | ,, | ருத்திரன், மித்திராவருணர், ஸோமன். | அநுஷ்டுப். | கலிநிலைத் துறை. |
| 44 | பிரஸ்கண்வன். | அக்கினி. | ப்ரஹதி, ஸ்தோப்ரஹதி. | 3ம் சீரும் 6ம் சீரும் காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், எழுசீர்க்கழி நெடில். |
| 45 | ,, | அக்கினி. | அநுஷ்டுப் | கலிநிலைத் துறை. |
| 46 | ,, | அசுவினிகள். | காயத்ரி. | கலிவிருத்தம். |

## 4-வது அத்தியாயம்.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 47 | பிரஸ்கண்வன் | அசுவினிகள். | ப்ரஹதி, ஸதோப்ரஹதி. | சூக்தம் 44 போல. |
| 48 | ,, | உஷஸ் | ,, | ,, |
| 49 | ,, | ,, | அநுஷ்டுப். | கலிநிலைத் துறை. |
| 50 | ,, | ஸூர்யன் | காயத்ரி, அநுஷ்டுப். | கலிவிருத்தம். கலிநிலைத் துறை. |
| 51 | ஸவ்யன் | இந்திரன். | ஜகதி, த்ருஷ்டுப். | 4 காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், அறுசீர்க்கழி நெடில் |
| 52 | ,, | ,, | ,, | ,, |
| 53 | ,, | ,, | ,, | ,, |

## முதலஷ்டக அட்டவணை.

| ஸூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம் | தமிழ்செய். |
|---|---|---|---|---|
| 54 | ஸவ்யன். | இந்திரன். | ஜகதி. த்ருஷ்டுப். | 4காய்ச்சீரறுசீர், அறுசீர்க்கழி நெடில். |
| 55 | | | ஜகதி. | 4காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில். |
| 56 | ,, | ,, | ,, | ,, |
| 57 | ,, | ,, | ,, | ,, |
| 58 | நோதா. | அக்கினி. | ஜகதி, த்ருஷ்டுப். | 4காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், அறுசீர்க்கழி நெடில். |
| 59 | ,, | வைச்வாநர அக்கினி | த்ருஷ்டுப். ,, | அறுசீர்க்கழி நெடில். |
| 60 | ,, | அக்கினி | ,, | ,, |
| 61 | ,, | இந்திரன். | ,, | ,, |

## 5-வது அத்தியாயம்.

| ஸூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம் | தமிழ்செய். |
|---|---|---|---|---|
| 62 | நோதா | இந்திரன். | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில் |
| 63 | ,, | ,, | ,, | ,, |
| 64 | ,, | மருத்துக்கள் | ஜகதி, த்ருஷ்டுப் | 4காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், அறுசீர்க்கழி நெடில். |
| 65 | பராசரன். | அக்கினி | துவிபாதவிராஜ் | கொச்சகக் கலிப்பா. |
| 66 | ,, | ,, | ,, | ,, |
| 67 | ,, | ,, | ,, | ,, |
| 68 | ,, | ,, | ,, | ,, |
| 69 | ,, | ,, | ,, | ,, |
| 70 | ,, | ,, | ,, | ,, |
| 71 | ,, | ,, | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 72 | ,, | ,, | ,, | ,, |
| 73 | ,, | ,, | ,, | ,, |
| 74 | கோதமன் | ,, | காயத்ரி | கலிவிருத்தம். |
| 75 | ,, | ,, | ,, | ,, |
| 76 | ,, | ,, | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில் |
| 77 | ,, | ,, | ,, | ,, |
| 78 | ,, | | காயத்ரி | கலிவிருத்தம். |

# ரிக்வேத ஸம்ஹிதை.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 79 | கோதமன். | அக்கினி. | த்ருஷ்டுப்<br>உஷ்ணி<br>காயத்ரி | அறுசீர்க்கழி<br>நெடில், கந்த<br>சதுகிச்<br>செய்யுள், கலி<br>விருத்தம். |
| 80 | ,, | இந்திரன் | பங்தி | அறுசீர்க்கழி<br>நெடில் ஒரடி<br>மேல் வைப்பு. |

## 6-வது அத்தியாயம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 81 | கோதமன், | இந்திரன் | பங்தி | அறுசீர்க்கழி<br>நெடில் ஒரடி<br>மேல் வைப்பு |
| 82 | ,, | ,, | ஷேடி<br>ஜகதி | ஷேடி<br>4காய்ச்சீருள்<br>ள அறுசீர்க்<br>கழிநெடில். |
| 83 | ,, | ,, | ,, | ,, |
| 84 | ,, | ,, | அநுஷ்டுப்,<br>உஷ்ணி,<br>பங்தி<br>காயத்ரி,<br>த்ருஷ்டுப்,<br>ப்ரஹதி,<br>ஸதோப்ரஹதி. | கலித்தாழிசைத்<br>துறை, கந்த<br>ஈது பூதிக்கலி,<br>அறுசீர் ஒரடி<br>மேல் வைப்பு,<br>கலிவிருத்தம்,<br>அறுசீர்க்கழி<br>நெடில், 2கா<br>ய்ச்சீருள்ள<br>அறுசீர், எழு<br>சீர்க்கழி நெ<br>டில். |
| 85 | ,, | மருத்துக்கள். | ஜகதி,<br>த்ருஷ்டுப். | 4காய்ச்சீருள்<br>ள அறுசீர்.<br>அறுசீர்க்கழி<br>நெடில். |
| 86 | ,, | ,, | காயத்ரீ | கலிவிருத்தம் |
| 87 | ,, | ,, | ஜகதி | 4 காய்ச்சீருள்ள<br>அறுசீர். |
| 88 | ,, | ,, | ப்ரஸ்தார பங்தி,<br>விராட் ரூபா,<br>த்ருஷ்டுப். | அறுசீர்க்கழி<br>நெடில் ஒரடி<br>மேல்வைப்பு.<br>அறுசீர்க்கழி<br>நெடில். |

## முதலஷ்டக அட்டவணை.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிசந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 89 | கோதமன். | விச்வதேவர்கள். | ஜகதி, விராட்ஸ்தானம், த்ருஷ்டுப். | நெடி 4 காய்ச்சீருள்ள அறுசீர், அறுசீர்க்கழி நெடில். |
| 90 | ,, | ,, | காயத்ரி அநுஷ்டுப் | கலிவிருத்தம் அறுசீர்க்கழி நெடில் |
| 91 | ,, | ஸோமன் | த்ருஷ்டுப் காயத்ரி, உஷ்ணி. | அறுசீர்க்கழி நெடில், கலிவிருத்தம் கந்தாறு பூஇக்கலி. |
| 92 | ,, | உஷஸ் அசுவினிகள் | ஜகதி, த்ருஷ்டுப், உஷ்ணி. | 4காய்ச்சீருள்ள அறுசீர் அறுசீர்க்கழிநெடில் கந்தாறு பூஇக்கலி |
| 93 | ,, | அக்நிஸோமர் | அநுஷ்டுப், காயத்ரி, த்ருஷ்டுப், ஜகதி. | கலிநிலைத்துறை, கலிவிருத்தம், அறுசீர்க்கழி நெடில் 4காய்ச்சீருள்ள அறுசீர். |
| 94 | குத்ஸன் | அக்கினி. மித்திரன் வருணன் அதிதி, ஸிந்து, ரோதஸி. | ஜகதி த்ருஷ்டுப். | 4 காய்ச்சீருள்ள அறுசீர், அறுசீர்க்கழி நெடில். |

## 7வது அத்தியாயம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 95 | குத்ஸன் | அக்கினி | த்ருஷ்டுப். | அறுசீர்க்கழி நெடில். |
| 96 | ,, | ,, | ,, | ,, |
| 97 | ,, | ,, | காயத்ரி | கலிவிருத்தம் |
| 98 | ,, | ,, | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 99 | காச்யபன். | ,, | ,, | ,, |
| 100 | வார்ஷாகிரர் | இந்திரன் | ,, | ,, |
| 101 | குத்ஸன் | ,, | த்ருஷ்டுப், ஜகதி. | அறுசீர். 4காய்ச்சீருள்ள அறுசீர். |

# ரிக்வேத ஸம்ஹிதை.

| ஸூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிசந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 102 | குத்ஸன். | இந்திரன் | த்ருஷ்டுப், ஜகதி | 101 போல |
| 103 | ,, | ,, | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 104 | ,, | ,, | ,, | ,, |
| 105 | குத்ஸனும், த்ருதன் ஆப்தியனும். | விச்வ தேவர்கள் | பங்க்தி, மஹாப் ரஹதி யவமத்யா, த்ருஷ்டுப். | அறுசீர்க்கழி நெடில் ஓரடி மேல் வைப்பு. 2காய்ச்சீருள்ள அறுசீர் ஓரடிமேல் வைப்பு, அறுசீர்க்கழி நெடில். |
| 106 | குத்ஸன். | ,, | ஜகதி, த்ருஷ்டுப் | 4காய்ச்சீருள்ள அறுசீர் அறுசீர்க்கழி நெடில். |
| 107 | ,, | ,, | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 108 | ,, | இந்திராக்கினிகள் | ,, | ,, |
| 109 | ,, | ,, | ,, | ,, |
| 10 | ,, | ரிபுக்கள் | த்ருஷ்டுப், ஜகதி. | அறுசீர். 4காய்ச்சீருள்ள அறுசீர். |
| 111 | ,, | ,, | ,, | ,, |
| 12 | ,, | ரோதஸீ, அசுவினிகள், அக்கினி. | ,, | ,, |

## 8-வது அத்தியாயம்.

| ஸூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிசந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 113 | குத்ஸன். | உஷஸ், உஷஸும் இரவும், | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 114 | ,, | ருத்ரன் | ௸ ஜகதி | ௸ 4காய்ச்சீருள்ள அறுசீர். |
| 115 | ,, | ஸூர்யன் | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 116 | கக்ஷீவான் | அசுவினிகள் | ,, | ,, |
| 117 | ,, | ,, | ,, | ,, |
| 118 | ,, | ,, | ,, | ,, |

## முதலஷ்டக அட்டவணை.

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிசந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|
| 119 | குத்ஸன். | அசுவினிகள். | ஜகதி | 4காய்ச்சீருள்ள அறுசீர். |
| 120 | ,, | ,, | (a) காயத்ரி,<br>(b) ககுப், தநுசிரா, உஷ்ணிக், க்ருதி,<br>(c) விஷ்டார ப்ரஹதி,<br>(d) நஷ்டரூபி,<br>(e) காவிராஜ், விராஜ். | (a) கலிவிரு.<br>(b) கந்தராறு பிக்கலி,<br>(c) 2காய்ச்சீருள்ள அறுசீர்,<br>(d) கலிநிலைத் துறை.<br>(e) மூன்றடித் தாழிசை அறுசீர்க்கழி நெடில் |
| 121 | ,, | விச்வதேவர் அல்லது இந்திரன். | த்ருஷ்டுப் | |

முக்கிய குறிப்பு. இவ்விடத்து முதல் மண்டலம் முடியவில்லை யென்பதைக் கவனிக்கவும். முதல் மண்டலத்தில் இன்னும் 70 சூக்தங்கள் மிகுந்துள்ளன.




## செந்தமிழ்.

இருக்குவேத சம்ஹிதை:— இது குன்னூர் ஆனந்தாச்ரமத்து ஸ்ரீமத் சிவத்தியானாநந்த மஹரிஷியால் தமிழிற் செய்யுளும் வசனமுமாய் மொழிபெயர்த்தியற்றப்பெற்று 1918-ஆண்டு ஏப்ரல் மீ த்திலிருந்து சஞ்சிகை ரூபமாக வெளியிடப்பட்டு வருகிறது. இதன் வருடசந்தா ரூபா 6. வேண்டுவோர் வேதபியூரோ, ஆநந்தாச்ரமம், குன்னூர் நீலகிரிமலை என்ற விலாசத்திற் கெழுதிப் பெறலாம்.